200

# பொன்னான நபிமொழிகள்


ஆங்கில மூலம்

அப்துல் மாலிக் முஜாஹித்

தாருஸ்ஸலாம் பதிப்பகம், ரியாத் – சவூதி அரபியா

தமிழில்

எஸ்.யூசுப் ஃபைஜி

இமாம் அல்பானீ (ரஹ்) நூலகம், கடையநல்லூர்



designed by **islamkalvi.com Media Team**

وَمَآ اٰتٰىكُمُ الرَّسُوْلُ فَخُذُوْهُ

وَمَا نَهٰىكُمْ عَنْهُ فَانْتَهُوْا

**இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுக்கிறாரோ அதைப் பெற்றுக் கொள்ளுங்கள். அவர் எதனைவிட்டும் உங்களைத் தடுக்கிறாரோ அதனை விட்டு விலகி இருங்கள்.**

ஸூரத்துல் ஹஷ்ர் : 7

## மொழிபெயர்ப்பாளரின் முன்னுரை

அல்ஹம்துலில்லாஹ்! எல்லாப்புகழும் இறைவனுக்கே!
அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொன்னவனாக ஆரம்பம் செய்கிறேன்.

சில மாதங்களுக்கு முன்பு, சகோதரர் தென்காசி எஸ்.ஏ.சித்தீக் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட 200 Golden Hadiths from the Messenger of Allah என்ற ஒரு புத்தகத்தை கொடுத்து அதை தமிழ்படுத்தி தாருங்கள் என்று கேட்டார்.

நானும் அப்புத்தகத்தை பார்வையிட்டேன். மிக அழகான புத்தகம். அதில் உள்ள ஒவ்வொரு ஹதீஸ்களும் முத்து முத்தானவைகள். அதை நீங்கள் படிக்கும் போது உணர்வீர்கள்.

இப்புத்தகத்தை சில விளக்கங்களுடன் பள்ளிவாசல்களில் காலையிலோ அல்லது மாலையிலோ மக்களுக்கு படித்துக்காட்டலாம். மக்களுக்கு பயனுள்ளதாக அமையும். அதே போன்று, சிறுவர் சிறுமியர் படிக்கும் மக்தப் மதரஸாக்களிலும் அவர்களுக்கு படித்துக் கொடுக்கலாம். அவர்கள் இந்த ஹதீஸ்களை மனனம் செய்யவும் வைக்கலாம். மேலும், பெண்கள் மதரஸாக்களிலும் இப்புத்தகத்தை பாடத்தில் வைக்கலாம். ஏன் சொல்கிறேன் என்றால், இப்புத்தகத்தில் உள்ள செய்திகள் நல்ல கருத்துக்களை வழங்கக்கூடியவை. அவைகள் படித்து அமல் செய்யத்தக்கவைகள்.

நற்பண்புகள், மனித நேயங்கள் குறைந்து காணப்படும் இக்காலத்தில் மிக அவசியமான பொருத்தமான கருத்துக்களை தரக்கூடியது. எனவே இப்புத்தகத்தை நாம் படித்தது மட்டுமில்லாமல் உங்களுடைய குடும்பத்தாரிடத்திலும் படித்துக்காட்டுங்கள். பிறமக்களுக்கும் எடுத்துச் செல்லுங்கள்.

அல்லாஹ் நம் அனைவருக்கும் அருள் செய்ய போதுமானவன்.

உலமாக்கள், அறிஞர்கள் இப்புத்தகத்தில் உள்ள குறைகளை சுட்டிக்காட்டுங்கள். மேலும், ஆலோசனைகளையும் வழங்குங்கள் வரும் பதிப்பில் அதை திருத்திக் கொள்கிறோம்.

*இமாம் அல்பானீ (ரஹ்) நூலகம் – கடையநல்லூர்*
*27.02.2019*

## அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

| | | |
|---|---|---|
| **எண்ணத்தைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியது தான் கிடைக்கிறது.** | 1 | إِنَّمَا الأَعْمَالُ بِالنِّيَّاتِ، وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى. |
| *ஸஹீஹுல் புகாரி – 1* | | |
| **அல்லாஹ் உங்கள் உடல்களையோ உருவங்களையோ பார்ப்பதில்லை. மாறாக, உங்கள் உள்ளங்களையே பார்க்கின்றான்.** | 2 | إِنَّ اللَّهَ لاَ يَنْظُرُ إِلَى أَجْسَادِكُمْ وَلاَ إِلَى صُوَرِكُمْ وَلَكِنْ يَنْظُرُ إِلَى قُلُوبِكُمْ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5011* | | |
| **மக்களே! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள். ஏனெனில், நான் ஒவ்வொரு நாளும் அவனிடம் நூறுமுறை பாவமன்னிப்புக் கோருகிறேன்.** | 3 | يَا أَيُّهَا النَّاسُ تُوبُوا إِلَى اللَّهِ فَإِنِّى أَتُوبُ فِى الْيَوْمِ إِلَيْهِ مِائَةَ مَرَّةٍ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5235* | | |
| **உயிர் தொண்டைக்குழியை அடையும் வரை ஒரு அடியானின் பாவமன்னிப்பை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.** | 4 | إن الله يقبل توبة العبد مالم يغرغر. |
| *திர்மிதி – 3537* | | |
| **அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய் மூடி இருக்கட்டும்.** | 5 | مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيَقُلْ خَيْرًا ، أَوْ لِيَصْمُتْ. |
| *ஸஹீஹுல் புகாரி – 6019* | | |

| | | |
|---|---|---|
| பொறுமை என்பது, துன்பம் ஏற்பட்டவுடன் கைக் கொள்வதே! | 6 | إِنَّ الصَّبْرَ عِنْدَ أَوَّلِ صَدْمَةٍ. |

ஸஹீஹுல் புகாரி – 1283

| | | |
|---|---|---|
| இறைநம்பிக்கையாளரின் நிலையைக் கண்டு நான் வியப்படைகிறேன். அவரது (வாழ்வின்) அனைத்து அம்சங்களும் (அவருக்கு) நன்மையாகவே அமையும். இறை நம்பிக்கையாளருக்கு அல்லாமல் வேறெவருக்கும் இ(ந்தப் பாக்கியமான)து கிட்டுவதில்லை. அவருக்கு ஏதேனும் மகிழ்ச்சி ஏற்பட்டால், அவர் நன்றி செலுத்துகிறார். அது அவருக்கு நன்மையாக அமைகிறது. அவருக்கு ஏதேனும் துயரம் நேர்ந்தால், அவர் பொறுமை காக்கிறார். அதுவும் அவருக்கு நன்மையாக அமைந்துவிடுகிறது. | 7 | عجبا لأمر المؤمن ,ان أمر المؤمن كله له خير ,وليس ذلك لأحد الا للمؤمن ,ان أصابته سراء شكر ,فكان خيراله وان أصابته ضراء صبر ,فكان خيراله. |

ஸஹீஹ் முஸ்லிம் – 5726

| | | |
|---|---|---|
| மக்களைத் தனது பலத்தால் அதிகமாக அடித்து வீழ்த்துபவன் வீரன் அல்லன்; உண்மையில் வீரன் என்பவன், கோபத்தின் போது தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவனே ஆவான். | 8 | لَيْسَ الشَّدِيدُ بِالصُّرَعَةِ, إِنَّمَا الشَّدِيدُ الَّذِي يَمْلِكُ نَفْسَهُ عِنْدَ الْغَضَبِ. |

ஸஹீஹுல் புகாரி – 6114

| | | |
|---|---|---|
| ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், “எனக்கு அறிவுரை கூறுங்கள்” என்றார். நபி (ஸல்) அவர்கள், “கோபத்தைக் கைவிடு” என்று (அறிவுரை) கூறினார்கள். அவர் (“அறிவுரை கூறுங்கள்” எனப்) பல முறை கேட்டபோதும் நபி (ஸல்) அவர்கள் “கோபத்தைக் கைவிடு” என்றே சொன்னார்கள் | 9 | أَنَّ رَجُلاً قَالَ لِلنَّبِيِّ صلى الله عليه وسلم أَوْصِنِي قَالَ : لاَ تَغْضَبْ فَرَدَّدَ مِرَارًا قَالَ : لاَ تَغْضَبْ. |

ஸஹீஹுல் புகாரி – 6116

| | | |
|---|---|---|
| சந்தேகமானதை விட்டுவிட்டு சந்தேகமில்லாததின் பக்கம் செல். உண்மை நம்பிக்கையை ஏற்படுத்தக்கூடியதாகும். பொய் சந்தேகமானதாகும். | 10 | دع ما يريبك إلى ما لا يريبك. |

திர்மிதி – 2518

| | | |
|---|---|---|
| நீ எங்கிருந்த போதும் இறைவனை பயந்து கொள். ஒரு தீமையை தொடர்ந்து தீமையை அழிக்கும் நன்மையை செய். மக்களிடத்தில் நல்ல குணத்துடன் பழகு. | 11 | اتق الله حيثما كنت أو أينما كنت قال زدني قال اتبع السيئة الحسنة تمحها قال زدني قال خالق الناس بخلق حسن |

திர்மிதி – 1987

| | | |
|---|---|---|
| ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! அதிக நன்மையுள்ள தர்மம் எது?" எனக் கேட்டார். "நீர், ஆரோக்கியமுள்ளவராகவும் பொருள் தேவை உடையவராகவும், வறுமையைப் பயப்படுபவராகவும் செல்வத்தில் ஆசை உள்ளவராகவும் இருக்கும் நிலையில் தர்மம் செய்வதே அதிக நன்மையுள்ளதாகும். எனவே, (தர்மம் செய்வதை) உயிர் தொண்டைக் குழியை நெருங்கும் வரை தாமதப்படுத் வேண்டாம். அந்நிலையில் இன்னாருக்கு இவ்வளவு; இன்னாருக்கு இவ்வளவு என்று கூறுவதிலும் அர்த்தமில்லை. ஏனெனில் அப்போது உமது பொருள்கள் மற்றவர்களுக்கென்று ஆகிவிட்டிருக்குமே!" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். | 12 | جَاءَ رَجُلٌ إِلَى النَّبِيِّ صلى الله عليه وسلم فَقَالَ يَا رَسُولَ اللهِ أَيُّ الصَّدَقَةِ أَعْظَمُ أَجْرًا قَالَ : أَنْ تَصَدَّقَ وَأَنْتَ صَحِيحٌ شَحِيحٌ تَخْشَى الْفَقْرَ وَتَأْمُلُ الْغِنَى ، وَلاَ تُمْهِلُ حَتَّى إِذَا بَلَغَتِ الْحُلْقُومَ قُلْتَ لِفُلاَنٍ كَذَا وَلِفُلاَنٍ كَذَا وَقَدْ كَانَ لِفُلاَنٍ. |

ஸஹீஹுல் புகாரி – 1419

| | | |
|---|---|---|
| இஸ்லாத்தில் மிகச்சிறந்த காரியம் ஒரு மனிதர் தனக்கு தேவையில்லாததை விட்டுவிடுவதாகும். | 13 | من حسن إسلام المرء تركه ما لا يعنيه. |

திர்மிதி – 2318

**14**

نِعْمَتَانِ مَغْبُونٌ فِيهِمَا كَثِيرٌ مِنَ النَّاسِ الصِّحَّةُ وَالْفَرَاغ.

**மனிதர்களில் அதிகமானோர் இரண்டு அருட்செல்வங்களின் விஷயத்தில் (ஏமாற்றப்பட்டு) இழப்புக்குள்ளாகிவிடுகின்றனர்.**
**1) ஆரோக்கியம், 2) ஓய்வு.**

*ஸஹீஹுல் புகாரி – 2412*

**15**

إِذَا مَرِضَ الْعَبْدُ ، أَوْ سَافَرَ كُتِبَ لَهُ مِثْلُ مَا كَانَ يَعْمَلُ مُقِيمًا صَحِيحًا.

**அடியான் ஆரோக்கியமானவனாயிருக்கும் போது செய்யும் நற்செயல்களுக்குக் கிடைப்பது போன்ற (அதே) நற்பலன் அவன் நோயுற்று விடும் போது அல்லது பிரயாணத்தில் இருக்கும் போது (அவன் பாவம் எதுவும் செய்யாமலிருக்கும் வரை) அவனுக்கு எழுதப்படும்.**

*ஸஹீஹுல் புகாரி – 2996*

**16**

مَا مِنْ مُسْلِمٍ يَغْرِسُ غَرْسًا ، أَوْ يَزْرَعُ زَرْعًا فَيَأْكُلُ مِنْهُ طَيْرٌ ، أَوْ إِنْسَانٌ ، أَوْ بَهِيمَةٌ إِلاَّ كَانَ لَهُ بِهِ صَدَقَةٌ.

**முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதைவிதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும்.**

*ஸஹீஹுல் புகாரி – 2320*

**17**

كُلُّ مَعْرُوفٍ صَدَقَةٌ.

**எல்லா நற்கர்மமும் தர்மமே!**

*ஸஹீஹுல் புகாரி – 6021*

| | | |
|---|---|---|
| **முஸ்லிம் பெண்களே! (உங்களில்) எந்தப் பெண்ணும் தன் அண்டை வீட்டுக்காரிக்கு ஓர் ஆட்டின் கால் குளம்பை (அன்பளிப்பாக) அளித்தாலும் அதை அவள் அற்பமாகக் கருத வேண்டாம்.** | **18** | يَا نِسَاءَ الْمُسْلِمَاتِ لاَ تَحْقِرَنَّ جَارَةٌ لِجَارَتِهَا وَلَوْ فِرْسِنَ شَاةٍ. |

*ஸஹீஹ் முஸ்லிம்* – 1868

| | | |
|---|---|---|
| **பேரீச்சம்பழத்தின் ஒரு சிறிய துண்டை தர்மம் செய்தாவது அதுவும் கிடைக்கவில்லையெனில் ஒரு நல்ல வார்த்தையின் மூலமாவது அந்த நரகத்திலிருந்து உங்களைக் காத்துக்கொள்ளுங்கள்** | **19** | فَلْيَتَّقِيَنَّ أَحَدُكُمُ النَّارَ وَلَوْ بِشِقِّ تَمْرَةٍ فَإِنْ لَمْ يَجِدْ فَبِكَلِمَةٍ طَيِّبَةٍ. |

*ஸஹீஹுல் புகாரி* – 1413

| | | |
|---|---|---|
| **மறுமை நாளில் ஆதமின் மக்கள் (மனிதர்கள்) அனைவருக்கும் தலைவன் நானே. முதன்முதலில் மண்ணறை பிளந்து (உயிர்த்து) எழுபவனும் நானே. முதன்முதலில் பரிந்துரை செய்பவனும் நானே. முதன்முதலில் பரிந்துரை ஏற்கப்படுபவனும் நானே.** | **20** | أَنَا سَيِّدُ وَلَدِ آدَمَ يَوْمَ الْقِيَامَةِ وَأَوَّلُ مَنْ يَنْشَقُّ عَنْهُ الْقَبْرُ وَأَوَّلُ شَافِعٍ وَأَوَّلُ مُشَفَّعٍ. |

*ஸஹீஹ் முஸ்லிம்* – 4575

| | | |
|---|---|---|
| **அல்லாஹ்வை அஞ்சும் படியும் கருப்பு நிற அபீசீனிய்ய அடிமையாக இருந்தாலும் ஆட்சியாளர்களுக்கு கட்டுப்பட்டு நடப்பதையும் நான் உங்களுக்கு உபதேசிக்கிறேன். உங்களில் எனக்குப்பிறகு வாழ்பவர் அதிகமான கருத்து வேறுபாடுகளை காண்பார். அப்போது எனது வழிமுறையும் நேர்வழி பெற்ற கலிபாக்களின் வழிமுறையையும் பற்றிபிடித்துக் கொள்ளுங்கள். அவைகளை உங்கள் கடவாய்ப் பற்களால் பற்றி பிடித்துக் கொள்ளுங்கள். மார்க்கத்தில் புதுமைகளை உண்டாக்குவதை விட்டு எச்சரிக்கை செய்கிறேன். நிச்சயமாக ஒவ்வொரு புதுமையும் நூதனங்களாகும். ஒவ்வொரு நூதனங்களும் வழிகேடே. ஒவ்வொரு வழிகேடும் நரகத்தில் சேர்க்கும்.** | **21** | أوصيكم بتقوى الله والسمع والطاعة وإن عبد حبشي فإنه من يعش منكم يرى اختلافا كثيرا وإياكم ومحدثات الأمور فإنها ضلالة فمن أدرك ذلك منكم فعليكم بسنتي وسنة الخلفاء الراشدين المهديين عضوا عليها بالنواجذ. |

*திர்மிதி* – 2676

| | | |
|---|---|---|
| ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதிலும் கருணை புரிவதிலும் பரிவு காட்டுவதிலும் இறை நம்பிக்கையாளர்களின் நிலையானது, ஓர் உடலின் நிலையைப் போன்றதாகும். உடலின் ஓர் உறுப்பு சுகவீனமடைந்தால், அதனுடன் மற்ற உறுப்புகளும் (சேர்ந்துகொண்டு) உறங்காமல் விழித்துக்கொண்டிருக்கின்றன. அத்துடன் உடல் முழுவதும் காய்ச்சலும் கண்டுவிடுகிறது. | 22 | مَثَلُ الْمُؤْمِنِينَ فِي تَوَادِّهِمْ وَتَرَاحُمِهِمْ وَتَعَاطُفِهِمْ مَثَلُ الْجَسَدِ إِذَا اشْتَكَى مِنْهُ عُضْوٌ تَدَاعَى لَهُ سَائِرُ الْجَسَدِ بِالسَّهَرِ وَالْحُمَّى. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5044* | | |
| மனிதர்களுக்கு இறக்கம் காட்டாதவனுக்கு அல்லாஹ் இறக்கம் காட்டமாட்டான். | 23 | مَنْ لاَ يَرْحَمِ النَّاسَ لاَ يَرْحَمْهُ اللَّهُ عَزَّ وَجَلَّ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 1682* | | |
| (பிறரின் குறையைத்) துருவித் துருவி ஆராயாதீர்கள். (விற்பனைப் பொருளின்) விலையை ஏற்றிக் கேட்காதீர்கள். ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (மாறாக), அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள். | 24 | لاَ تَحَاسَدُوا وَلاَ تَنَاجَشُوا وَلاَ تَبَاغَضُوا وَلاَ تَدَابَرُوا وَلاَ يَبِعْ بَعْضُكُمْ عَلَى بَيْعِ بَعْضٍ وَكُونُوا عِبَادَ اللَّهِ إِخْوَانًا. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5010* | | |
| ஒரு முஸ்லிலிம் மற்றொரு முஸ்லிலிமுக்குச் சகோதரர் ஆவார். அவர் தம் சகோதரருக்கு அநீதியிழைக்கவோ, அவருக்குத் துரோகமிழைக்கவோ, அவரைக் கேவலப்படுத்தவோ வேண்டாம். | 25 | الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ لاَ يَظْلِمُهُ وَلاَ يَخْذُلُهُ وَلاَ يَحْقِرُهُ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5010* | | |

**26**

انْصُرْ أَخَاكَ ظَالِمًا ، أَوْ مَظْلُومًا فَقَالَ رَجُلٌ يَا رَسُولَ اللهِ أَنْصُرُهُ إِذَا كَانَ مَظْلُومًا أَفَرَأَيْتَ إِذَا كَانَ ظَالِمًا كَيْفَ أَنْصُرُهُ قَالَ تَحْجُزُهُ ، أَوْ تَمْنَعُهُ مِنَ الظُّلْمِ فَإِنَّ ذَلِكَ نَصْرُهُ

**"உன் சகோதரன் அக்கிரமக்காரனாக இருக்கும் நிலையிலும் அக்கிரமத்துக் குள்ளானவனாக இருக்கும் நிலையிலும் அவனுக்கு நீ உதவி செய்" என்று சொன்னார்கள். அப்போது ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! அக்கிரமத்திற்குள் ளானவனுக்கு நான் உதவி செய்வேன். (அது சரிதான்.) அக்கிரமக்காரனுக்கு எப்படி நான் உதவி செய்வேன்? கூறுங்கள்!" என்றார். நபி (ஸல்) அவர்கள், "அவனை அக்கிரமம் செய்ய விடாமல் நீ தடுப்பாயாக! இதுவே நீ அக்கிரமக்காரனுக்குச் செய்யும் உதவியாகும்" என்றார்கள்.**

*ஸஹீஹுல் புகாரி – 6952*

---

**27**

حَقُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ خَمْسٌ رَدُّ السَّلاَمِ وَعِيَادَةُ الْمَرِيضِ وَاتِّبَاعُ الْجَنَائِزِ وَإِجَابَةُ الدَّعْوَةِ وَتَشْمِيتُ الْعَاطِسِ.

**ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஐந்து. அவை: "சலாமுக்கு பதிலுரைப்பது, நோயாளியை நலம்விசாரிப்பது, ஜனாஸாவைப் பின் தொடர்வது, விருந்தழைப்பை ஏற்றுக் கொள்வது, தும்முபவருக்கு மறுமொழி கூறுவது ஆகியவையாகும்".**

*ஸஹீஹுல் புகாரி – 1240*

---

**28**

لاَ يَسْتُرُ اللَّهُ عَلَى عَبْدٍ فِي الدُّنْيَا إِلاَّ سَتَرَهُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ.

**அல்லாஹ் ஓர் அடியாரின் குறையை இவ்வுலகில் மறைத்துவிட்டால், அதை அவன் மறுமை நாளிலும் மறைக்காமல் இருப்பதில்லை.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 5049*

---

**29**

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيَصِلْ رَحِمَهُ.

**அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் இரத்தபந்த உறவுகளைப் பேணி வாழட்டும்.**

*ஸஹீஹுல் புகாரி – 6138*

"யார் இரு பெண்குழந்தைகளை, அவர்கள் பருவ வயதடையும் வரை பொறுப்பேற்று கருத்தாக வளர்க்கிறாரோ அவரும் நானும் மறுமை நாளில் இப்படி வருவோம்" என்று கூறிவிட்டு, தம் விரல்களை இணைத்துக் காட்டினார்கள்.

**30**

مَنْ عَالَ جَارِيَتَيْنِ حَتَّى تَبْلُغَا جَاءَ يَوْمَ الْقِيَامَةِ أَنَا وَهُوَ وَضَمَّ أَصَابِعَهُ.

*ஸஹீஹ் முஸ்லிம் – 5127*

---

"(இவருக்காக என்னிடம்) பரிந்துரை செய்யுங்கள்; அதனால் உங்களுக்கும் நற்பலன் வழங்கப்படும்"

**31**

اشْفَعُوا فَلْتُؤْجَرُوا.

*ஸஹீஹ் முஸ்லிம் – 5123*

---

ஒவ்வொரு நாளும் இரு வானவர்கள் இறங்குகின்றனர். அவ்விருவரில் ஒருவர், "அல்லாஹ்வே! தர்மம் செய்பவருக்குப் பிரதிபலனை அளித்திடுவாயாக!" என்று கூறுவார். மற்றொருவர் "அல்லாஹ்வே! (தர்மம் செய்யாமல் பொருளைத்) தடுத்து வைத்துக்கொள்பவர்களுக்கு அழிவை ஏற்படுத்துவாயாக!" என்று கூறுவார்கள்.

**32**

مَا مِنْ يَوْمٍ يُصْبِحُ الْعِبَادُ فِيهِ إِلاَّ مَلَكَانِ يَنْزِلاَنِ فَيَقُولُ أَحَدُهُمَا اللَّهُمَّ أَعْطِ مُنْفِقًا خَلَفًا وَيَقُولُ الآخَرُ اللَّهُمَّ أَعْطِ مُمْسِكًا تَلَفًا.

*ஸஹீஹுல் புகாரி – 1442*

---

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும்.

**33**

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ

*ஸஹீஹுல் புகாரி – 6138*

---

**34**

“அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன்” என்று (மூன்று முறை) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “அவன் யார்? அல்லாஹ்வின் தூதரே!” என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் “எவனுடைய நாசவேலைகளிலிருந்து அவனுடைய அண்டை வீட்டார் பாதுகாப்பு உணர்வைப் பெறவில்லையோ அவன்தான்” என்று பதிலளித்தார்கள்.

وَاللَّهِ لاَ يُؤْمِنُ وَاللَّهِ لاَ يُؤْمِنُ وَاللَّهِ لاَ يُؤْمِنُ قِيلَ ، وَمَنْ يَا رَسُولَ اللهِ قَالَ الَّذِي لاَ يَأْمَنُ جَارُهُ بَوَايِقَهُ.

*ஸஹீஹுல் புகாரி – 6016*

**35**

ஒருவர் அவருடைய நண்பருடைய மார்க்கத்திலேயே இருக்கிறார்கள். எனவே ஒருவர் தான் யாரை நண்பராக்கியிருக்கிறார் என்பதை பார்க்கட்டும்.

الرجل على دين خليله فلينظر أحدكم من يخالل.

*திர்மிதி – 2378*

**36**

“நீ யாரை நேசிக்கின்றாயோ அவர்களுடன் (மறுமையில்) இருப்பாய்!”

إِنَّكَ مَعَ مَنْ أَحْبَبْتَ.

*ஸஹீஹுல் புகாரி – 6168*

**37**

நபியவர்கள் என் கையை பிடித்து “முஆதே அல்லாஹ்வின் மீது ஆணையாக உன்னை நேசிக்கிறேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக உன்னை நேசிக்கிறேன். உனக்கு நான் உபிதேசிக்கிறேன். கமையான ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் இதை சொல்லாமல் விட்டுவிடாதே. “இறைவா உன்னை நினைவு கூர்வதற்கும். உனக்கு நன்றி செலுத்துவதற்கும் உன்னை அழுகுற வணங்குதற்கும் உதவி செய்வாயாக!”

عَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ أَنَّ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- أَخَذَ بِيَدِهِ وَقَالَ: يَا مُعَاذُ وَاللَّهِ إِنِّى لأُحِبُّكَ فَقَالَ: أُوصِيكَ يَا مُعَاذُ لاَ تَدَعَنَّ فِى دُبُرِ كُلِّ صَلاَةٍ تَقُولُ اللَّهُمَّ أَعِنِّى عَلَى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ.

*அபூதாவூத் – 1524*

| | | |
|---|---|---|
| கிராமவாசிகளில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாள் எப்போது சம்பவிக்கும்?'' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "உனக்கென்ன கேடு! அதற்காக நீ என்ன முன்முயற்சி செய்துள்ளாய்?'' என்று கேட்டார்கள். அவர் "நான் அதற்காக (ஏதும்) முன்முயற்சி செய்ய வில்லை; ஆயினும், நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறேன்'' என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், "(அப்படியானால்,) நீ யாரை நேசிக்கின்றாயோ அவர்களுடன் (மறுமையில்) இருப்பாய்!'' என்றார்கள். | 38 | عَنْ أَنَسٍ أَنَّ رَجُلاً مِنْ أَهْلِ الْبَادِيَةِ أَتَى النَّبِيَّ صلى الله عليه وسلم فَقَالَ يَا رَسُولَ اللهِ مَتَى السَّاعَةُ قَائِمَةٌ قَالَ وَيْلَكَ وَمَا أَعْدَدْتَ لَهَا قَالَ مَا أَعْدَدْتُ لَهَا إِلاَّ أَنِّي أُحِبُّ اللَّهَ وَرَسُولَهُ قَالَ إِنَّكَ مَعَ مَنْ أَحْبَبْتَ فَقُلْنَا وَنَحْنُ كَذَلِكَ قَالَ نَعَمْ فَفَرِحْنَا يَوْمَئِذٍ فَرَحًا شَدِيدًا فَمَرَّ غُلاَمٌ لِلْمُغِيرَةِ ، وَكَانَ مِنْ أَقْرَانِي فَقَالَ إِنْ أُخِّرَ هَذَا فَلَنْ يُدْرِكَهُ الْهَرَمُ حَتَّى تَقُومَ السَّاعَةُ. |

*ஸஹீஹுல் புகாரி – 6167*

| | | |
|---|---|---|
| இவ்வுலகம், இறைநம்பிக்கையாளர்களுக்குச் சிறைச்சாலையாகும்; இறைமறுப்பாளர்களுக்குச் சொர்க்கச் சோலையாகும். | 39 | الدُّنْيَا سِجْنُ الْمُؤْمِنِ وَجَنَّةُ الْكَافِرِ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 5663*

| | | |
|---|---|---|
| இறந்துபோனவரை மூன்று பொருட்கள் பின்தொடர்ந்து செல்கின்றன. அவரை அவருடைய குடும்பமும் செல்வமும் அவர் செய்த செயல்களும் பின்தொடர்ந்து செல்கின்றன. (அவற்றில்) அவருடைய குடும்பமும் செல்வமும் திரும்பிவிடுகின்றன. அவருடைய செயல்கள் மட்டுமே அவருடன் தங்கிவிடும். | 40 | يتبع الميت ثلاثة ، فيرجع اثنان ، ويبقى معه واحد : يتبعه أهله وماله وعمله ، فيرجع أهله وماله ويبقى عمله. |

*ஸஹீஹுல் புகாரி – 6514*

| | | |
|---|---|---|
| உங்களுக்குக் கீழிருப்பவர்களைப் பாருங்கள். உங்களைவிட மேலிருப்பவர்களைப் பார்க்காதீர்கள். அதுவே அல்லாஹ் புரிந்திருக்கும் அருட்கொடைகளை நீங்கள் குறைத்து மதிப்பிடாமலிருக்க மிகவும் ஏற்றதாகும். | 41 | انْظُرُوا إِلَى مَنْ أَسْفَلَ مِنْكُمْ وَلاَ تَنْظُرُوا إِلَى مَنْ هُوَ فَوْقَكُمْ فَهُوَ أَجْدَرُ أَنْ لاَ تَزْدَرُوا نِعْمَةَ اللَّهِ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 5671*

**42**

தனது வீட்டில் பாதுகாப்பாக இருந்த நிலையிலும் தனது உடல் ஆரோக்கியத்துடன் இருந்த நிலையிலும் அன்றைய நாளுக்கான போதுமான உணவைப் பெற்றிருந்த நிலையிலும் யார் ஒருவர் காலைப் பொழுதை அடைகிறாரோ அவர் இவ்வுலகத்தையே பெற்றவரைப் போன்றவர் ஆவார்.

من أصبح منكم آمنا في سربه معافى في جسده عنده قوت يومه فكأنما حيزت له الدنيا.

*திர்மிதி – 2346*

**43**

உயர்ந்த (கொடுக்கும்) கை, தாழ்ந்த (வாங்கும்) கையைவிடச் சிறந்தது. நீர் நெருங்கிய உறவினர்களிலிருந்து தர்மம் செய்ய ஆரம்பிப்பீராக! தேவைபோக எஞ்சியதைக் கொடுப்பதே சிறந்த தர்மமாகும்.

الْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى وَابْدَأْ بِمَنْ تَعُولُ وَخَيْرُ الصَّدَقَةِ عَنْ ظَهْرِ غِنًى.

*ஸஹீஹுல் புகாரி – 1428*

**44**

(வாழ்க்கை) வசதிகள் அதிகமாக இருப்பது செல்வமன்று; மாறாகப் போதுமென்ற மனமே (உண்மையான) செல்வமாகும்.

لَيْسَ الْغِنَى عَنْ كَثْرَةِ الْعَرَضِ وَلَكِنَّ الْغِنَى غِنَى النَّفْسِ.

*ஸஹீஹுல் புகாரி – 6446*

**45**

இரண்டு விஷயங்களைத் தவிர வேறெதிலும் பொறாமை கொள்ளக் கூடாது. ஒரு மனிதருக்கு அல்லாஹ் வழங்கிய செல்வத்தை அவர் நல்ல வழியில் செலவு செய்தல்; இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி, அதற்கேற்ப அவர் தீர்ப்பு வழங்குபவராகவும் கற்றுக் கொடுப்பவராகவும் இருப்பது (ஆகியவையே அந்த இரண்டு விஷயங்கள்).

لاَ حَسَدَ إِلاَّ فِي اثْنَتَيْنِ رَجُلٌ آتَاهُ اللَّهُ مَالاً فَسُلِّطَ عَلَى هَلَكَتِهِ فِي الْحَقِّ وَرَجُلٌ آتَاهُ اللَّهُ الْحِكْمَةَ فَهْوَ يَقْضِي بِهَا وَيُعَلِّمُهَا.

*ஸஹீஹுல் புகாரி – 73*

| | | |
|---|---|---|
| **ஒரு மனிதர் நபி(ஸல்) அவர்களிடம், "இஸ்லாமி(யப் பண்புகளி)ல் சிறந்தது எது' எனக் கேட்டார். "(பசித்தோருக்கு) நீர் உணவளிப்பதும் நீர் அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் சலாம் (முகமன்) கூறுவதுமாகும்" என்று பதிலளித்தார்கள்.** | **46** | أَنَّ رَجُلاً سَأَلَ النَّبِيَّ صلى الله عليه وسلم أَيُّ الإِسْلاَمِ خَيْرٌ قَالَ تُطْعِمُ الطَّعَامَ وَتَقْرَأُ السَّلاَمَ عَلَى مَنْ عَرَفْتَ ، وَمَنْ لَمْ تَعْرِفْ. |
| *ஸஹீஹுல் புகாரி – 12* | | |
| **தர்மம் செல்வத்தைக் குறைப்பதில்லை. மன்னிப்பதால் ஓர் அடியாருக்கு அல்லாஹ் கண்ணியத்தையே அதிகப்படுத்துகிறான். அல்லாஹ்வுக்காக ஒருவர் பணிவு காட்டினால் அவரை அல்லாஹ் உயர்த்தாமல் இருப்பதில்லை.** | **47** | مَا نَقَصَتْ صَدَقَةٌ مِنْ مَالٍ وَمَا زَادَ اللَّهُ عَبْدًا بِعَفْوٍ إِلاَّ عِزًّا وَمَا تَوَاضَعَ أَحَدٌ لِلَّهِ إِلاَّ رَفَعَهُ اللَّهُ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5447* | | |
| **கல்வியறிவு அகற்றப்பட்டுவிடுவதும், அறியாமை நிலைத்து விடுவதும், மது (மலிவாக) அருந்தப்படுவதும், விபசாரம் (பரவலாய்) நடப்பதும் மறுமை நாளின் சில அடையாளங்களாகும்.** | **48** | إِنَّ مِنْ أَشْرَاطِ السَّاعَةِ أَنْ يُرْفَعَ الْعِلْمُ وَيَثْبُتَ الْجَهْلُ وَيُشْرَبَ الْخَمْرُ وَيَظْهَرَ الزِّنَا. |
| *ஸஹீஹுல் புகாரி – 80* | | |
| **அல்லாஹ், "ஆதமின் மகனே! (மனிதனே! மற்றவர்களுக்காகச்) செலவிடு; உனக்கு நான் செலவிடுவேன்" என்று கூறினான்.** | **49** | قَالَ اللَّهُ أَنْفِقْ يَا ابْنَ آدَمَ أُنْفِقْ عَلَيْكَ. |
| *ஸஹீஹுல் புகாரி – 5352* | | |
| **அநீதியிழைப்பதிலிருந்து தவிர்ந்துகொள்ளுங்கள். ஏனெனில் அநீதியானது, மறுமை நாளில் பல இருள்களாகக் காட்சி தரும்.** | **50** | اتَّقُوا الظُّلْمَ فَإِنَّ الظُّلْمَ ظُلُمَاتٌ يَوْمَ الْقِيَامَةِ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5034* | | |

## 51

أكثروا ذكر هاذم اللذات يعني الموت.

**இன்பங்களை அழித்தொழிக்கும் மரணத்தை நினைவு கூறுங்கள்**

*திர்மிதி – 2307*

## 52

الْبِرُّ حُسْنُ الْخُلُقِ وَالإِثْمُ مَا حَاكَ فِى صَدْرِكَ وَكَرِهْتَ أَنْ يَطَّلِعَ عَلَيْهِ النَّاسُ.

**“நன்மை என்பது நற்பண்பாகும். தீமை என்பது எந்தச் செயல் குறித்து உனது உள்ளத்தில் நெருடல் ஏற்படுவதுடன், அதை மக்கள் தெரிந்துகொள்வதை நீ வெறுப்பாயோ அதுவாகும்”**

*ஸஹீஹ் முஸ்லிம் – 4992*

## 53

إِنَّ اللَّهَ يُحِبُّ الْعَبْدَ التَّقِىَّ الْغَنِىَّ الْخَفِىَّ.

**“அல்லாஹ் இறையச்சமுள்ள, போதுமென்ற மனமுடைய, (குழப்பங்களிலிருந்து) ஒதுங்கி வாழ்கின்ற அடியானை நேசிக்கின்றான்”**

*ஸஹீஹ் முஸ்லிம் – 5673*

## 54

لاَ يَدْخُلُ الْجَنَّةَ مَنْ كَانَ فِى قَلْبِهِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ كِبْرٍ. قَالَ رَجُلٌ: إِنَّ الرَّجُلَ يُحِبُّ أَنْ يَكُونَ ثَوْبُهُ حَسَنًا وَنَعْلُهُ حَسَنَةً. قَالَ: إِنَّ اللَّهَ جَمِيلٌ يُحِبُّ الْجَمَالَ الْكِبْرُ بَطَرُ الْحَقِّ وَغَمْطُ النَّاسِ.

**நபி (ஸல்) அவர்கள் “யாருடைய உள்ளத்தில் அணுவளவு தற்பெருமை இருக்கிறதோ அவர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்” என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர், “தமது ஆடை அழகாக இருக்க வேண்டும்; தமது காலணி அழகாக இருக்க வேண்டும் என ஒருவர் விரும்புகிறார். (இதுவும் தற்பெருமையில் சேருமா?)” என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ் அழகானவன்; அழகையே அவன் விரும்புகின்றான். தற்பெருமை என்பது (ஆணவத்தோடு) உண்மையை மறுப்பதும், மக்களைக் கேவலமாக மதிப்பதும்தான்” என்று கூறினார்கள்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 91*

| | | |
|---|---|---|
| மூன்று பேரிடம் மறுமை நாளில் அல்லாஹ் பேசவுமாட்டான்; அவர்களைத் தூய்மைப் படுத்தவுமாட்டான்; அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனைதான் உண்டு. "விபசாரம் புரிகின்ற முதியவர், பொய் சொல்கின்ற அரசன், பெருமையடிக்கும் ஏழை" ஆகியோர் (தாம் அம்மூவரும்). | 55 | ثلاَثَةٌ لاَ يُكَلِّمُهُمُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلاَ يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ "الْمُسْبِلُ وَالْمَنَّانُ وَالْمُنَفِّقُ سِلْعَتَهُ بِالْحَلِفِ الْكَاذِبِ". |
| ஸஹீஹ் முஸ்லிம் – 172 | | |
| "உங்களில் சிறந்தவர்; உங்களில் நற்குணமுடையவரே" | 56 | إِنَّ مِنْ خِيَارِكُمْ أَحْسَنَكُمْ أَخْلاَقًا. |
| ஸஹீஹுல் புகாரி – 3559 | | |
| கருமித்தனத்திலிருந்து தவிர்ந்துகொள்ளுங்கள். ஏனெனில் கருமித்தனமானது, உங்களுக்கு முன்னிருந்தவர்களை அழித்தது; | 57 | اتَّقُوا الشُّحَّ فَإِنَّ الشُّحَّ أَهْلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ. |
| ஸஹீஹ் முஸ்லிம் – 5034 | | |
| உங்களில் பூரணமான பண்புள்ளவரே முழுமையான ஈமான் உள்ளவர். உங்கள் மனைவிமார்களிடத்தில் சிறந்தவர்களே உங்களில் சிறந்தவர்கள். | 58 | أكمل المؤمنين إيمانا أحسنهم خلقا وخياركم خياركم لنسائهم خلقا. |
| திர்மிதி – 1168 | | |
| உன்னிடத்தில் இரண்டு பண்புகள் இருக்கிறது அந்த இரண்டு பண்புகளையும் அல்லாஹ் நேசிக்கிறான். 1-பொருமை 2-நிதாணம். | 59 | أن النبي صلى الله عليه و سلم قال الأشج عبد القيس إن فيك خصلتين يحبهما الله الحلم والأناة. |
| திர்மிதி – 2011 | | |

**60**

إِنَّ اللَّهَ رَفِيقٌ يُحِبُّ الرِّفْقَ وَيُعْطِى عَلَى الرِّفْقِ مَا لاَ يُعْطِى عَلَى الْعُنْفِ.

**நிச்சயமாக அல்லாஹ் மென்மையானவன். மென்மையையே விரும்புகிறான். மேலும் கடினப் போக்கிற்கு கொடுக்காததை மெண்மைக்கு கொடுக்கிறான்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 2593*

**61**

رَجُلاَنِ فَشَمَّتَ أَحَدَهُمَا وَلَمْ يُشَمِّتِ الآخَرَ فَقَالَ الَّذِى لَمْ يُشَمِّتْهُ عَطَسَ فُلاَنٌ فَشَمَّتَّهُ وَعَطَسْتُ أَنَا فَلَمْ تُشَمِّتْنِى.

**உங்களில் ஒருவர் தும்மி, 'அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறினால் அவருக்கு நீங்கள் மறுமொழி கூறுங்கள். அவர் 'அல்ஹம்துலில்லாஹ்' என்று கூறாவிட்டால், அவருக்கு நீங்கள் மறுமொழி கூறாதீர்கள்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 5716*

**62**

كُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ الإِمَامُ رَاعٍ وَمَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالرَّجُلُ رَاعٍ فِي أَهْلِهِ وَهْوَ مَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ وَالْمَرْأَةُ رَاعِيَةٌ فِي بَيْتِ زَوْجِهَا وَمَسْؤُولَةٌ عَنْ رَعِيَّتِهَا وَالْخَادِمُ رَاعٍ فِي مَالِ سَيِّدِهِ وَمَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ- قَالَ وَحَسِبْتُ أَنْ قَدْ قَالَ - وَالرَّجُلُ رَاعٍ فِي مَالِ أَبِيهِ وَمَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ وَكُلُّكُمْ رَاعٍ وَمَسْؤُولٌ عَنْ رَعِيَّتِهِ.

**நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே! நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் பொறுப்பு குறித்து (மறுமையில்) விசாரிக்கப்படுவீர்கள். ஆட்சித் தலைவரும் பொறுப்பாளரே! தம் குடிமக்கள் குறித்து அவர் விசாரிக்கப்படுவார். ஆண் மக(னான குடும்பத் தலைவ)னும் தன் குடும்பத்துக்குப் பொறுப்பாளியே! அவன் தன் பொறுப்புக்கு உட்பட்டவர்கள் பற்றி விசாரிக்கப்படுவான். பெண்(மனைவி), தன் கணவரது வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள்! அவளுடைய பொறுப்புக்கு உட்பட்டவை குறித்து அவள் விசாரிக்கப்படுவாள். பணியாளர் தன் எசமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான்! அவனும் தன் பொறுப்புக்கு உட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவான்.**

*ஸஹீஹுல் புகாரி – 893*

**63**

مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ فِيهِ فَهُوَ رَدٌّ.

**நம்முடைய இந்த (மார்க்க) விவகாரத்தில் அதில் இல்லாததைப் புதிதாக எவன் உண்டாக்குகின்றானோ அவனுடைய அந்தப் புதுமை நிராகரிக்கப்பட்டதாகும்.**

*ஸஹீஹுல் புகாரி – 2697*

| | | |
|---|---|---|
| "எனக்குக் கீழ்ப்படிந்தவர் சொர்க்கம் புகுவார்; எனக்கு மாறு செய்தவர் (சத்தியத்தை) ஏற்க மறுத்தவர் ஆவார்" | **64** | مَنْ أَطَاعَنِي دَخَلَ الْجَنَّةَ ، وَمَنْ عَصَانِي فَقَدْ أَبَى. |
| *ஸஹீஹுல் புகாரி – 7280* | | |
| யார் நல்லதை பிறருக்கு அறிவிக்கிறாரோ அவர் அதை செய்தவரைப் போன்றவராவார். | **65** | مَنْ دَلَّ عَلَى خَيْرٍ فَلَهُ مِثْلُ أَجْرِ فَاعِلِهِ |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 1893* | | |
| யார் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை; முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் என்று உறுதி கூறுகிறாரோ அவருக்கு அல்லாஹ் நரகத்தைத் தடை செய்துவிடுகிறான். | **66** | مَا مِنْ عَبْدٍ يَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ إِلاَّ حَرَّمَهُ اللَّهُ عَلَى النَّارِ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 47* | | |
| "நானும் அநாதையின் காப்பாளரும் சொர்க்கத்தில் இப்படி இருப்போம்" என்று கூறியபடி நபி (ஸல்) அவர்கள் தமது சுட்டு விரலாலும் நடு விரலாலும் சைகை செய்தார்கள். | **67** | أَنَا وَكَافِلُ الْيَتِيمِ فِي الْجَنَّةِ هَكَذَا وَقَالَ بِإِصْبَعَيْهِ السَّبَّابَةِ وَالْوُسْطَى. |
| *ஸஹீஹுல் புகாரி – 6005* | | |
| பலவீனர்களிடத்தில் என்னைத் தேடுங்கள். பலவீனர்களின் காரணமாகத்தான் நீங்கள் உணவும் உதவியும் செய்யப்படுகிறீர்கள். | **68** | ابغوني في ضعفائكم فإنكم إنما ترزقون و تنصرون بضعفائكم. |
| *திர்மிதி – 1702* | | |

**69**

إن الدنيا كلها متاع وخير متاع الدنيا المرأة الصالحة.

**இவ்வுலகம் (முழுவதும்) பயனளிக்கும் செல்வங்களே! பயனளிக்கும் இவ்வுலகச் செல்வங்களில் மிகவும் மேலானது, நல்ல மனைவியே!**

*ஸஹீஹ் முஸ்லிம் – 2911*

---

**70**

أيما امرأة ماتت وزوجها عنها راض دخلت الجنة.

**எந்த பெண் கணவன் திருப்தி கொண்ட நிலையில் மரணிக்கிறாரோ அவள் சொர்க்கத்தில் நுழைவாள்.**

*திர்மிதி – 1161*

---

**71**

مَازَالَ يُوصِينِي جِبْرِيلُ بِالْجَارِ حَتَّى ظَنَنْتُ أَنَّهُ سَيُوَرِّثُه.

**அண்டை வீட்டார் குறித்து என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் அறிவுறுத்திக்கொண்டே யிருந்தார். எந்த அளவிற்கென்றால், (எங்கே) அண்டை வீட்டாரை எனக்கு வாரிசாக்கி விடுவாரோ என்று கூட நான் எண்ணினேன்.**

*ஸஹீஹுல் புகாரி – 6014*

---

**72**

رَغِمَ أَنْفُهُ ثُمَّ رَغِمَ أَنْفُهُ ثُمَّ رَغِمَ أَنْفُهُ قِيلَ: مَنْ يَا رَسُولَ اللَّهِ؟ قَالَ : مَنْ أَدْرَكَ وَالِدَيْهِ عِنْدَ الْكِبَرِ أَحَدَهُمَا أَوْ كِلَيْهِمَا ثُمَّ لَمْ يَدْخُلِ الْجَنَّةَ.

**நபி (ஸல்) அவர்கள், "மூக்கு மண்ணைக் கவ்வட்டும்" என்று மூன்று முறை கூறினார்கள். "யார் (மூக்கு), அல்லாஹ்வின் தூதரே?'' என்று கேட்கப்பட்டது. அதற்கு "தம் பெற்றோரில் ஒருவரையோ அல்லது அவர்கள் இருவரையுமோ முதுமைப் பருவத்தில் அடைந்தும் (அவர்களுக்கு உடலாலும் பொருளாலும் ஊழியம் செய்து, அதன் மூலம்) சொர்க்கம் செல்லத் தவறியவரின் (மூக்குத் தான்)'' என்று பதிலளித்தார்கள்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 4987*

| | | |
|---|---|---|
| நம்மில் சிறியவருக்கு இரக்கம் காட்டதவருக்கும் பெரியவர்களின் சிறப்பை அறியாதவருக்கும் அல்லாஹ் இரக்கம் காட்டமாட்டான். | 73 | ليس منا من لم يرحم صغيرنا ويعرف شرف كبيرنا. |

திர்மிதி – 1920

| | | |
|---|---|---|
| நான்கு (நோக்கங்களு)க்காக ஒரு பெண் மணமுடிக்கப்படுகிறாள்: அவளது செல்வத்திற்காக, அவளது குடும்பப் பாரம்பரியத்திற்காக, அவளது அழகிற்காக, அவளது மார்க்க (நல்லொழுக்க)த்திற்காக. ஆகவே, மார்க்க (நல்லொழுக்க)ம் உடையவளை (மணந்து)கொண்டு வெற்றி அடைந்துகொள்! (இல்லையேல்) உன்னிரு கரங்களும் மண்ணாகட்டும்! | 74 | تُنْكَحُ الْمَرْأَةُ لأَرْبَعٍ لِمَالِهَا وَلِحَسَبِهَا وَجَمَالِهَا وَلِدِينِهَا فَاظْفَرْ بِذَاتِ الدِّينِ تَرِبَتْ يَدَاكَ. |

ஸஹீஹ் முஸ்லிம் – 5090

| | | |
|---|---|---|
| நீங்கள் இறைநம்பிக்கை (ஈமான்) கொள்ளாத வரை சொர்க்கத்தில் நுழைய முடியாது. நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்காதவரை (முழுமையான) இறைநம்பிக்கையாளர்களாக ஆக முடியாது. ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அதை நீங்கள் செயல்படுத்தினால் ஒருவரை ஒருவர் நேசம் கொள்ளலாம். உங்களிடையே சலாத்தைப் பரப்புங்கள். | 75 | لاَ تَدْخُلُونَ الْجَنَّةَ حَتَّى تُؤْمِنُوا وَلاَ تُؤْمِنُوا حَتَّى تَحَابُّوا.أَوَلاَ أَدُلُّكُمْ عَلَى شَىْءٍ إِذَا فَعَلْتُمُوهُ تَحَابَبْتُمْ أَفْشُوا السَّلاَمَ بَيْنَكُمْ. |

ஸஹீஹ் முஸ்லிம் – 93

| | | |
|---|---|---|
| என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் வந்து “அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் இறந்துவிட்டவர் சொர்க்கம் செல்வார்” எனும் நற்செய்தியைத் தெரிவித்தார். “அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலுமா?” என்று நான் கேட்க, “ஆம். அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தலும் சரியே” என்று பதிலளித்தார்கள். | 76 | مَنْ مَاتَ يُشْرِكُ بِاللَّهِ شَيْئًا دَخَلَ النَّارَ وَقُلْتُ أَنَا مَنْ مَاتَ لاَ يُشْرِكُ بِاللَّهِ شَيْئًا دَخَلَ الْجَنَّةَ. |

ஸஹீஹுல் புகாரி – 7487

**77**

سَبْعَةٌ يُظِلُّهُمُ اللَّهُ فِي ظِلِّهِ يَوْمَ لاَ ظِلَّ إِلاَّ ظِلُّهُ الإِمَامُ الْعَادِلُ وَشَابٌّ نَشَأَ فِي عِبَادَةِ رَبِّهِ وَرَجُلٌ قَلْبُهُ مُعَلَّقٌ فِي الْمَسَاجِدِ وَرَجُلاَنِ تَحَابَّا فِي اللهِ اجْتَمَعَا عَلَيْهِ وَتَفَرَّقَا عَلَيْهِ وَرَجُلٌ طَلَبَتْهُ امْرَأَةٌ ذَاتُ مَنْصِبٍ وَجَمَالٍ فَقَالَ إِنِّي أَخَافُ اللَّهَ وَرَجُلٌ تَصَدَّقَ أَخْفَى حَتَّى لاَ تَعْلَمَ شِمَالُهُ مَا تُنْفِقُ يَمِينُهُ وَرَجُلٌ ذَكَرَ اللَّهَ خَالِيًا فَفَاضَتْ عَيْنَاهُ.

**அல்லாஹ் தனது (அரியணையின்) நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத (மறுமை) நாளில் ஏழு பேருக்கு நிழல் (அடைக்கலம்) அளிப்பான்:**

1. **நீதி மிக்க ஆட்சியாளர்.**
2. **இறை வணக்கத்திலேயே வளர்ந்த இளைஞன்.**
3. **பள்ளிவாசல்களுடன் (எப்போதும்) தொடர்பு வைத்துக்கொள்ளும் இதயமுடையவர்.**
4. **அல்லாஹ்வுக்காகவே நட்புக்கொண்டு அந்த நிலையிலேயே (இவ்வுலகிலிருந்து) பிரிந்து சென்ற இருவர்.**
5. **அந்தஸ்தும் அழகும் உள்ள ஒரு பெண் தம்மை தவறு செய்ய அழைத்தபோதும் “நான் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறேன்” என்று கூறியவர்.**
6. **தமது வலக் கரம் செய்த தர்மத்தை இடக் கரம்கூட அறியாத வகையில் இரகசியமாக தர்மம் செய்தவர்.**
7. **தனிமையில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து (அவனது அச்சத்தால்) கண்ணீர் வடித்தவர்.**

*ஸஹீஹுல் புகாரி – 660*

---

**78**

لَيْسَ مِنَّا مَنْ لَطَمَ الْخُدُودَ وَشَقَّ الْجُيُوبَ وَدَعَا بِدَعْوَى الْجَاهِلِيَّةِ.

**(துன்பத்தின்போது) கன்னங்களில் அறைந்துகொள்பவனும், சட்டைப் பைகளைக் கிழித்துக்கொள்பவனும் அறியாமைக் கால (மாச்சரியங்களுக்காக) அழைப்பு விடுப்பவனும் நம்மைச் சார்ந்தவன் அல்லன்.**

*ஸஹீஹுல் புகாரி – 1298*

---

**79**

يَسِّرُوا ، وَلاَ تُعَسِّرُوا وَبَشِّرُوا ، وَلاَ تُنَفِّرُوا.

**(மார்க்க விஷயங்களில் மக்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள். (மக்களைச்) சிரமப் படுத்தாதீர்கள். நற்செய்தி(களை அதிகம்) சொல்லுங்கள். வெறுப்பேற்றிடாதீர்கள்.**

*ஸஹீஹுல் புகாரி – 69*

**80**

مَنْ عَادَ مَرِيضًا لَمْ يَحْضُرْ أَجَلُهُ فَقَالَ عِنْدَهُ سَبْعَ مِرَارٍ أَسْأَلُ اللَّهَ الْعَظِيمَ رَبَّ الْعَرْشِ الْعَظِيمِ أَنْ يَشْفِيَكَ إِلاَّ عَافَاهُ اللَّهُ مِنْ ذَلِكَ الْمَرَضِ.

**மரணமாகாத ஒரு நோயாளியை ஒருவர் சந்தித்து அவரிடத்தில் "அஸ்அலுல்லாஹல் அழீம் ரப்பல் அர்ஷில் அழீம் அய் யஷ்ஃபியக" (மகத்துவமிக்க அர்ஷின் அதிபதியாகிய அல்லாஹ்விடம் உனக்கு நிவாரணம் அளிக்க கேட்கிறேன்) என்று ஏழு முறை கூறினால் அல்லாஹ் அவரை நோயிலிருந்தது நிவாரணமளிப்பான்.**

*அபூதாவூத் – 3108*

**81**

إِذَا دَخَلَ أَحَدُكُمُ الْمَسْجِدَ فَلْيَرْكَعْ رَكْعَتَيْنِ قَبْلَ أَنْ يَجْلِسَ.

**உங்களில் ஒருவர் பள்ளிவாசலுக்குள் நுழைந்ததும் இரண்டு ரக்அத்கள் தொழாமல் உட்கார வேண்டாம்.**

*ஸஹீஹுல் புகாரி – 1163*

**82**

إِذَا مَاتَ الإِنْسَانُ انْقَطَعَ عَنْهُ عَمَلُهُ إِلاَّ مِنْ ثَلاَثَةٍ إِلاَّ مِنْ صَدَقَةٍ جَارِيَةٍ أَوْ عِلْمٍ يُنْتَفَعُ بِهِ أَوْ وَلَدٍ صَالِحٍ يَدْعُو لَهُ.

**மனிதன் இறந்துவிட்டால் அவனுடைய மூன்று செயல்களைத் தவிர மற்ற அனைத்தும் நின்றுவிடுகின்றன; 1. நிலையான அறக்கொடை 2. பயன்பெறப்படும் கல்வி. 3. அவனுக்காகப் பிரார்த்திக்கும் (அவனுடைய) நல்ல குழந்தை.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 3358*

**83**

مَنْ صَلَّى الْعِشَاءَ فِي جَمَاعَةٍ فَكَأَنَّمَا قَامَ نِصْفَ اللَّيْلِ وَمَنْ صَلَّى الصُّبْحَ فِي جَمَاعَةٍ فَكَأَنَّمَا صَلَّى اللَّيْلَ كُلَّهُ.

**"இஷாத் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுகின்றவர், பாதி இரவுவரை நின்று வணங்கியவரைப் போன்றவர் ஆவார். சுப்ஹுத் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுகின்றவர், இரவு முழுதும் நின்று வணங்கிய வரைப் போன்றவர் ஆவார்".**

*ஸஹீஹ் முஸ்லிம் – 1162*

**84**

அடியார் ஒருவரின் பிள்ளை இறந்துவிட்டால் அல்லாஹ் தன் வானவர்களிடம் என் அடியாரின் பிள்ளையை உயிரைக் கைப்பற்றி விட்டீர்களா? என்று கேட்பான். அதற்கு வானவர்கள் ஆம் என்பார்கள். அப்போது அல்லாஹ் அவரது இதயக்கனியையா பரீத்தீர்கள்? என்று கேட்பான். அதற்கு வானவர்கள் ஆம் என்பார்கள். அல்லாஹ் அப்போது எனது அடியார் என்ன சொன்னார் என்று கேட்பான். வானவர்கள் அவர் உன்னைப் புகழ்ந்து "இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன்" என்று கூறினார் என்பர். அப்போது அல்லாஹ் எனது அடியாருக்கு சொர்க்கத்தில் ஒரு மாளிகையை எழுப்புங்கள் அதற்கு "பைத்துல் ஹம்து - புகழ் மாளிகை" எனப் பெயரிடுங்கள் என்று கூறுவான்.

دفنت ابني سنانا و أبو طلحة الخولاني جالس على شفير القبر فما أردت الخروج أخذ بيدي فقال ألا أبشرك يا أبا سنان ! قلت بلى فقال حدثني الضحاك بن عبد الرحمن بن عرزب عن أبي موسى الأشعري أن رسول الله صلى الله عليه و سلم قال إذا مات ولد العبد قال الله لملائكته قبضتم ولد عبدي ! فيقولون نعم فيقول قبضتم ثمرة فؤاده ! فيقولون نعم فيقول ماذا قال عبدي ؟ فيقولون حمدك واسترجع فيقول الله إبنوا لعبدي بيتا في الجنة وسموه بيت الحمد.

*திர்மிதி – 942*

---

**85**

இயற்கை மரபுகள் ஐந்தாகும். விருத்த சேதனம் செய்துகொள்வது, மர்ம உறுப்பின் முடிகளைக் களைந்துகொள்வதற்காக சவரக் கத்தியை உபயோகிப்பது, மீசையைக் கத்தரிப்பது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடிகளை அகற்றுவது ஆகியவைதாம்.

الْفِطْرَةُ خَمْسٌ ، أَوْ خَمْسٌ مِنَ الْفِطْرَةِ - الْخِتَانُ وَالاِسْتِحْدَادُ وَنَتْفُ الإِبْطِ وَتَقْلِيمُ الأَظْفَارِ وَقَصُّ الشَّارِبِ.

*ஸஹீஹுல் புகாரி – 5891*

---

**86**

ரமளான் மாதம் வந்துவிட்டால் வானத்தில் வாசல்கள் திறக்கப்படுகின்றன; நரகத்தின் வாயில்கள் அடைக்கப்படுகின்றன; ஷைத்தான்கள் விலங்கிடப்படுகின்றனர்.

إِذَا دَخَلَ شَهْرُ رَمَضَانَ فُتِّحَتْ أَبْوَابُ السَّمَاءِ وَغُلِّقَتْ أَبْوَابُ جَهَنَّمَ وَسُلْسِلَتِ الشَّيَاطِينُ.

*ஸஹீஹுல் புகாரி – 1899*

**87**

تَسَحَّرُوا فَإِنَّ فِي السَّحُورِ بَرَكَةً.

**நீங்கள் சஹர் செய்யுங்கள்; நிச்சயமாக சஹர் செய்வதில் அருள்வளம் (பரக்கத்) இருக்கிறது.**

*ஸஹீஹுல் புகாரி – 1923*

**88**

قَالَ : اللَّهُ كُلُّ عَمَلِ ابْنِ آدَمَ لَهُ إِلاَّ الصِّيَامَ فَإِنَّهُ لِي وَأَنَا أَجْزِي بِهِ وَالصِّيَامُ جُنَّةٌ ، وَإِذَا كَانَ يَوْمُ صَوْمِ أَحَدِكُمْ فَلاَ يَرْفُثْ ، وَلاَ يَصْخَبْ فَإِنْ سَابَّهُ أَحَدٌ ، أَوْ قَاتَلَهُ فَلْيَقُلْ إِنِّي امْرُؤٌ صَائِمٌ.

**“நோன்பைத் தவிர ஆதமுடைய மகனின் ஒவ்வொரு செயலும் அவனுக்குரியதாகும்! நிச்சயமாக, நோன்பு எனக்கு (மட்டுமே) உரியது; அதற்கு நானே நற்பலன் அளிப்பேன்!” என்று அல்லாஹ் கூறுகிறான். நோன்பு (பாவங்களிலிருந்து காக்கும்) கேடயமாகும்! எனவே, உங்களில் ஒருவர் நோன்பு நோற்றால் அவர் கெட்ட பேச்சுகள் பேச வேண்டாம்! கூச்சலிட்டு சச்சரவு செய்ய வேண்டாம்! யாரேனும் அவரை ஏசினால் அல்லது அவருடன் சண்டையிட்டால் “நான் நோன்பாளி!’’ என்று அவர் சொல்லட்டும்!**

*ஸஹீஹுல் புகாரி – 1904*

**89**

مَنْ لَمْ يَدَعْ قَوْلَ الزُّورِ وَالْعَمَلَ بِهِ فَلَيْسَ لِلَّهِ حَاجَةٌ فِي أَنْ يَدَعَ طَعَامَهُ وَشَرَابَهُ.

**யார் பொய்யான பேச்சையும் பொய்யான நடவடிக்கைகளையும் விட்டு விடவில்லையோ அவர் தமது உணவையும் பானத்தையும் விட்டு விடுவதில் அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையுமில்லை!**

*ஸஹீஹுல் புகாரி – 1903*

**90**

رَحِمَ اللَّهُ رَجُلاً سَمْحًا إِذَا بَاعَ ، وَإِذَا اشْتَرَى ، وَإِذَا اقْتَضَى.

**வாங்கும்போதும் விற்கும்போதும் வழக்காடும்போதும் பெருந்தன்மையாக நடந்துகொள்ளும் மனிதருக்கு அல்லாஹ் அருள்புரிவானாக!**

*ஸஹீஹுல் புகாரி – 2076*

| | | |
|---|---|---|
| **தொழிலாளியின் வேர்வைத்துளி காயுமுன் அவருடைய கூலியை வழங்கிவிடுங்கள்.** (இந்த செய்தி பல வழிகளில் ஹசன் தரத்தில் அமைந்தது என்று சுஐப், அர்னாவுத், அல்பானி (ரஹ்) போன்றோர் சொல்லியிருக்கிறார்கள்) | **91** | أَعْطُوا الأَجِيرَ أَجْرَهُ ، قَبْلَ أَنْ يَجِفَّ عَرَقُهُ. |

*இப்னுமாஜா – 2443*

| | | |
|---|---|---|
| **நீங்கள் செயலை சரியாக செய்வதை அல்லாஹ் விரும்புகிறான்.** | **92** | إن الله عز و جل يحب إذا عمل أحدكم عملا أن يتقنه. |

*மு:ஜமுல் அவ்ஸத் தப்ரானி 1/275*

| | | |
|---|---|---|
| **ரமளான் மாதம் நோன்பு நோற்று அதைத் தொடர்ந்து ஷவ்வால் மாதத்தில் ஆறு நோன்பு நோற்றவர், காலமெல்லாம் நோன்பு நோற்ற வரைப் போன்றவராவார்** | **93** | مَنْ صَامَ رَمَضَانَ ثُمَّ أَتْبَعَهُ سِتًّا مِنْ شَوَّالٍ كَانَ كَصِيَامِ الدَّهْرِ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 2159*

| | | |
|---|---|---|
| **மனிதர்களில் அல்லாஹ்விற்கு விருப்பமானவர் மக்களுக்கு மிகவும் பயனுள்ளவராக இருப்பார். அல்லாஹ்விடத்தில் மிக விருப்பமான செயல் ஒரு முஸ்லிமிடத்தில் சந்தோஷத்தை கொண்டு வருவது அல்லது அவரை விட்டும் அவரின் சிரமத்தை நீக்குவது அல்லது அவரின் கடனை நிறைவேற்றுவது அல்லது அவரை விட்டு அவரின் பசியை போக்குவதாகும்.** | **94** | أحب إلى الله وأي الأعمال أحب إلى الله عز و جل فقال رسول الله صلى الله عليه و سلم أحب الناس إلى الله أنفعهم للناس وأحب الأعمال إلى الله سرور تدخله على مسلم أو تكشف عنه كربة أو تقضي عنه دينا أو تطرد عنه جوعا. |

*மு:ஜமுல் அவ்ஸத் 6/139*

**95**

**யார் தன்னுடைய கோபத்தை தடுக்கிறாரோ அவருடைய குறையை அல்லாஹ் மறைப்பான். யார் அதை செய்வதற்கு செய்வதற்கு சக்தி பெற்றிருந்த நிலையிலும் கோபத்தை மென்று விழுங்கிறாரோ யார் தன் சகோதரரின் தேவையை நிறைவேற்றுவதற்காக செல்கிறாரோ கால்கள் தடுமாறும் (கியாம) நாளில் அவருடைய கால்களை நிலைபெறச் செய்வான். கெட்ட பண்பு சமையல் காடி தேனைக் கெடச் செய்வதைப் போல நல்லமல்களை கெடச் செய்துவிடும்.**

من كف غضبه ستر الله عورته و من كظم غيظه و لو شاء أن يمضيه أمضاه ملأ الله قلبه رجاء يوم القيامة و من مشى مع أخيه في حاجة حتى تتهيأ له أثبت الله قدمه يوم تزول الأقدام و إن سوء الخلق يفسد العمل كما يفسد الخل العسل.

*ஸில்ஸிலதுல் அஹாதீஸ் ஸஹீஹா (அல்பானி) 2/480*

---

**96**

**நோன்பு திறக்க நோன்பாளிக்கு யார் உதவுகிறாரோ அவருக்கு நோன்பாளிக்கு கிடைக்கும் நன்மையைப் போன்று கிடைக்கும். அதே நேரத்தில் நோன்பாளிக்கு கிடைக்கும் நன்மையில் சிறிதும் குறைந்துவிடாது.**

من فطر صائما كان له مثل أجره غير أنه لا ينقص من أجر الصائم شيئا.

*திர்மிதி – 735*

---

**97**

**“அழித்தொழிக்கும் ஏழு பெரும் பாவங்களைத் தவிருங்கள்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பதும் - சூனியம் செய்வதும் - நியாயமின்றி கொல்லக் கூடாது என்று அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிரைக் கொல்வதும் - வட்டி உண்பதும் - அனாதைகளின் செல்வத்தை உண்பதும் - போரின் போது புறமுதுகிட்டு ஓடுவதும் - அப்பாவிகளான, இறைநம்பிக்கை கொண்ட, கற்புள்ள பெண்களின் மீது அவதூறு கூறுவதும்“ தான் (அந்தப் பெரும் பாவங்கள்) என்று கூறினார்கள்.**

اجْتَنِبُوا السَّبْعَ الْمُوبِقَاتِ قَالُوا : يَا رَسُولَ اللهِ وَمَا هُنَّ قَالَ الشِّرْكُ بِاللَّهِ وَالسِّحْرُ وَقَتْلُ النَّفْسِ الَّتِي حَرَّمَ اللَّهُ إِلاَّ بِالْحَقِّ وَأَكْلُ الرِّبَا وَأَكْلُ مَالِ الْيَتِيمِ وَالتَّوَلِّي يَوْمَ الزَّحْفِ وَقَذْفُ الْمُحْصَنَاتِ الْمُؤْمِنَاتِ الْغَافِلاَتِ.

*ஸஹீஹுல் புகாரி – 2766*

| | | |
|---|---|---|
| ஒரு பூனையை, அது சாகும் வரை (பட்டினி போட்டு) கட்டி வைத்த காரணத்தால், பெண் ஒருத்தி (நரகத்தில்) வேதனை செய்யப்பட்டாள். அதை அடைத்து வைத்த போது அவள் அதற்குத் தீனியும் போட வில்லை; அதற்கு (குடிக்கத்) தண்ணீரும் கொடுக்கவில்லை; அவள் அதை பூமியின் புழு பூச்சிகளைத் தின்ன (அவிழ்த்து) விடவுமில்லை. | **98** | عُذِّبَتِ امْرَأَةٌ فِي هِرَّةٍ حَبَسَتْهَا حَتَّى مَاتَتْ جُوعًا فَدَخَلَتْ فِيهَا النَّارَ- قَالَ فَقَالَ وَاللَّهُ أَعْلَمُ - لاَ أَنْتِ أَطْعَمْتِهَا ، وَلاَ سَقَيْتِهَا حِينَ حَبَسْتِيهَا ، وَلاَ أَنْتِ أَرْسَلْتِيهَا فَأَكَلَتْ مِنْ خَشَاشِ الأَرْضِ. |

*ஸஹீஹுல் புகாரி – 2365*

| | | |
|---|---|---|
| தாம்பத்திய உறவு மற்றும் பாவச் செயல்களில் ஈடுபடாமல் ஒருவர் அல்லாஹ்வுக்காகவே ஹஜ் செய்தால் அவர் அவருடைய தாய் அவரைப் பெற்றெடுத்த நாளில் இருந்ததைப் போன்று (பாவமறியாப் பாலகராகத்) திரும்புவார். | **99** | مَنْ حَجَّ لِلَّهِ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّهُ. |

*ஸஹீஹுல் புகாரி – 1521*

| | | |
|---|---|---|
| இந்த (துல்ஹஜ் மாதம் முதல்) பத்து நாட்களில் செய்யும் செயல்கள் ஏனைய நாட்களில் செய்யும் நற்செயல்களை விட அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமானவை என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது நபித்தோழர்கள் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் செய்வதை விடவுமா என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவதைவிடவும்தான் ஆயினும் உயிரோடும் பொருளோடும் புறப்பட்டுச் சென்று அவ்விரண்டில் எதையும் திரும்பக் கொண்டு வராமல் இரண்டையும் அர்ப்பணித்த மனிதரைத் தவிர என்று கூறினார்கள். | **100** | ما من أيام العمل الصالح فيهن أحب إلى الله من هذه الأيام العشر فقالوا يا رسول الله ولا الجهاد في سبيل الله ؟ فقال رسول الله صلى الله عليه و سلم ولا الجهاد في سبيل الله إلا رجل خرج بنفسه وماله فلم يرجع من ذلك بشيء وفي الباب عن ابن عمر و أبي هريرة و عبد الله بن عمرو و جابر. |

*திர்மிதி – 688*

**101**

مَا مِنْ يَوْمٍ أَكْثَرَ مِنْ أَنْ يُعْتِقَ اللَّهُ فِيهِ عَبْدًا مِنَ النَّارِ مِنْ يَوْمِ عَرَفَةَ.

**அல்லாஹ், அரஃபா (துல்ஹஜ் 9ஆவது) நாளில் அடியார்களுக்கு நரக விடுதலையளிக்கும் அளவிற்கு வேறெந்த நாளிலும் நரகவிடுதலை அளிப்பதில்லை.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 2623*

**102**

عينان لا تسمهما النار عين بكت من خشية الله وعين باتت تحرس في سبيل الله.

**இரண்டு கண்களை நரக நெருப்பு தீண்டாது. ஒன்று அல்லாஹ்வின் அச்சத்தினால் அழுத கண். மற்றொன்று அல்லாஹ்வின் பாதையில் இரவு முழுவதும் விழித்திருந்து (முஸ்லிம்களை) பாதுகாத்த கண்.**

*திர்மிதி – 1639*

**103**

مَنْ أَتَى عَرَّافًا فَسَأَلَهُ عَنْ شَيْءٍ لَمْ تُقْبَلْ لَهُ صَلاَةٌ أَرْبَعِينَ لَيْلَةً.

**எவரொருவர் சோதிடனிடம் சென்று, எதைப் பற்றியாவது கேட்டால், அ(வ்வாறு கேட்ட)வருடைய நாற்பது நாட்களின் தொழுகை அங்கீகரிக்கப்படுவதில்லை.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 4488*

**104**

الإِيمَانُ بِضْعٌ وَسِتُّونَ شُعْبَةً وَالْحَيَاءُ شُعْبَةٌ مِنَ الإِيمَانِ.

**இறைநம்பிக்கை (ஈமான்) அறுபதுக்கும் அதிகமான கிளைகளைக் கொண்டதாகும். நாணமும் இறைநம்பிக்கையின் ஒரு கிளையே.**

*ஸஹீஹுல் புகாரி – 9*

**105**

**எந்த அடியார் காலையிலும் மாலையிலும் (பிஸ்மில்லாஹில்லதீ லா யழுர்ரு மஅ இஸ்மிஹி ஷைய்வுன் ஃபில் அர்ழி வலா ஃபிஸ் ஸமாயி வஹுவஸ் ஸமீவுல் அழீம்) "பூமியிலோ வானத்திலோ எந்த ஒன்றும் எவனுடைய பெயரைக் கொண்டு தீங்கிழைக்காதோ அத்தகையவனின் பெயரைக் கொண்டு பாதுகாவல் தேடுகின்றேன். மேலும் அவன் நன்கு பார்ப்பவனாகவும் அறிந்தவனாகவும் இருக்கிறான்" என்று மூன்று முறை கூறுவாரோ அவருக்கு எதுவும் தீங்கிழைக்காது.**

مَا مِنْ عَبْدٍ يَقُولُ فِي صَبَاحِ كُلِّ يَوْمٍ ، وَمَسَاءِ كُلِّ لَيْلَةٍ : بِسْمِ اللهِ الَّذِي لاَ يَضُرُّ مَعَ اسْمِهِ شَيْءٌ فِي الأَرْضِ وَلاَ فِي السَّمَاءِ ، وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ ، ثَلاَثَ مَرَّاتٍ ، فَيَضُرَّهُ شَيْءٌ.

*திர்மிதி – 3388*

---

**106**

**அநீதியிழைக்கப்பட்டவரின் சாபத்திற்கு (உங்களால் அநீதிக்கு ஆளானவர் இறைவனிடம் உங்கள் அநீதியைக் குறித்து முறையிட்டு உங்களுக்குக் கேடாகப் பிரார்த்தனை புரிவதைப் பற்றி) அஞ்சுங்கள். ஏனெனில், அதற்கும் அல்லாஹ்வுக்கும் இடையே எந்தத் திரையும் இல்லை.**

اتَّقِ دَعْوَةَ الْمَظْلُومِ فَإِنَّهَا لَيْسَ بَيْنَهَا وَبَيْنَ اللهِ حِجَابٌ.

*ஸஹீஹுல் புகாரி – 2448*

---

**107**

**ஆதமின் மகனே! நீ எனக்கு இணைவைக்காத நிலையில் பூமி முழுவதும் பாவத்தை கொண்டு வந்தாலும் பூமி முழுவதும் மன்னிப்பைக் கொண்டுவருவேன்.**

يا بن آدم لو عملت قراب الأرض خطايا ولم تشرك بي شيئا جعلت لك قراب الأرض مغفرة.

*அஹ்மத் – 21349*

---

**108**

**யார் அமானிதத்தை பேணவில்லையோ அவருக்கு ஈமான் இல்லை. யார் சத்தியத்தை கடைபிடிக்கவில்லையோ அவருக்கு மார்க்கம் இல்லை.**

لا إيمان لمن لا أمانة له ولا دين لمن لا عهد له.

*அஹ்மத் – 12406*

**109**

لاَ يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ.

**உங்களில் ஒருவர் தமக்கு விரும்புவதையே தம் சகோதரனுக்கும் விரும்பாத வரை (முழுமையான) இறைநம்பிக்கை கொண்டவராக ஆகமாட்டார்.**

*ஸஹீஹுல் புகாரி – 13*

---

**110**

تَبْلُغُ الْحِلْيَةُ مِنَ الْمُؤْمِنِ حَيْثُ يَبْلُغُ الْوَضُوءُ.

**இறைநம்பிக்கையாளரின் உறுப்புகளில் எங்கெல்லாம் உளூவின் நீர் படுகிறதோ அங்கெல்லாம் வெண்மை பரவும்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 420*

---

**111**

مَثَلُ الَّذِي يَذْكُرُ رَبَّهُ وَالَّذِي لاَ يَذْكُرُ مَثَلُ الْحَيِّ وَالْمَيِّتِ.

**தம் இறைவனை நினைவு கூர்ந்து போற்றுகின்றவரின் நிலை உயிருள்ளவரின் நிலைக்கும், தம் இறைவனை நினைவு கூர்ந்து போற்றாதவரின் நிலை உயிரற்றவரின் நிலைக்கும் ஒத்திருக்கிறது.**

*ஸஹீஹுல் புகாரி – 6407*

---

**112**

مَنْ رَأَى مِنْكُمْ مُنْكَرًا فَلْيُغَيِّرْهُ بِيَدِهِ فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِلِسَانِهِ
فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِقَلْبِهِ وَذَلِكَ أَضْعَفُ الإِيمَانِ.

**உங்களில் ஒருவர் ஒரு தீமையை (மார்க்கத்திற்கு முரணான ஒரு செயலை)க் கண்டால் அவர் அதைத் தமது கரத்தால் தடுக்கட்டும். முடியாவிட்டால் தமது நாவால் (சொல்லித் தடுக்கட்டும்). அதுவும் முடியாவிட்டால் தமது உள்ளத்தால் (அதை வெறுத்து ஒதுக்கட்டும்). இந்த (இறுதி) நிலையானது இறைநம்பிக்கையின் பலவீனமா(ன நிலையா)கும்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 78*

| | | |
|---|---|---|
| ஒரு முஸ்லிம் தம் சகோதரரிடம் (மனஸ்தாபம் கொண்டு) மூன்று நாட்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்ட தன்று. | 113 | لاَ يَحِلُّ لِمُسْلِمٍ أَنْ يَهْجُرَ أَخَاهُ فَوْقَ ثَلاَثٍ. |

ஸஹீஹுல் புகாரி – 6237

| | | |
|---|---|---|
| இறுதி முடிவுகளைப் பொறுத்தே செயல்கள் தீர்மானிக்கப்படுகின்றன. | 114 | إِنَّمَا الأَعْمَالُ بِالْخَوَاتِيمِ. |

ஸஹீஹுல் புகாரி – 6607

| | | |
|---|---|---|
| அல்லாஹ்விடத்தில் பிரார்த்தனையை விட மிக சிறப்பானது எதுவும் இல்லை. | 115 | ليس شيء أكرم على الله تعالى من الدعاء. |

திர்மிதி – 3370

| | | |
|---|---|---|
| யார் அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத் தூதராகவும் மன நிறைவோடு ஏற்றுக்கொண்டாரோ அவர் இறை நம்பிக்கையின் சுவையை அடைந்துவிட்டார். | 116 | ذَاقَ طَعْمَ الإِيمَانِ مَنْ رَضِيَ بِاللَّهِ رَبًّا وَبِالإِسْلاَمِ دِينًا وَبِمُحَمَّدٍ رَسُولاً. |

ஸஹீஹ் முஸ்லிம் – 56

| | | |
|---|---|---|
| உலகத்தில் நீ பற்றற்றவனாக இரு அல்லாஹ் உன்னை நேசிப்பான். மக்களிடத்தில் இருப்பதை விட்டும் ஆசையற்று இரு. மக்கள் உன்னை நேசிப்பார்கள். | 117 | ازْهَدْ فِي الدُّنْيَا يُحِبَّكَ اللَّهُ ، وَازْهَدْ فِيمَا فِي أَيْدِي النَّاسِ يُحِبُّكَ النَّاس. |

இப்னுமாஜா – 4102

| | | |
|---|---|---|
| **நிச்சயமாக அல்லாஹ் உயிரோடு இருப்பவன். தாராளமானவன். அவனிடத்தில் ஒரு மனிதர் தன்னுடைய இரண்டு கைகளையும் உயர்த்தி கேட்டுவிட்டால் அவ்விரண்டையும் வெறுமனே திருப்பி அனுப்புவதற்கு வெட்கப்படுகிறான்.** | 118 | إِنَّ اللَّهَ حَيِيٌّ كَرِيمٌ يَسْتَحِى إِذَا رَفَعَ الرَّجُلُ إِلَيْهِ يَدَيْهِ أَنْ يَرُدَّهُمَا صِفْرًا خَائِبَتَيْنِ. |
| *திர்மிதி – 3556* | | |
| **என்னிடமிருந்து (ஹஜ்ஜின்) காரியங்களை எடுத்துக் கொள்ளுங்கள்.** | 119 | خُذُوا عَنِّى مَنَاسِكَكُمْ. |
| *பைஹகி அல் குப்ரா – 9996* | | |
| **எந்த நோக்கத்திற்காக ஸம்ஸம் தண்ணீர் அருந்தப்படுகிறதோ, அந்த நோக்கம் நிறைவேறும்.** | 120 | مَاءُ زَمْزَمَ ، لِمَا شُرِبَ لَهُ. |
| *இப்னுமாஜா – 3062* | | |
| **பூமியின் மேல் உள்ள நீர்களில் ஸம்ஸம் தண்ணீர்தான் சிறந்தது. அதில் பசிக்கு உணவு இருக்கிறது. நோய்க்கு மருந்து இருக்கிறது.** | 121 | خَيْرُ مَاءٍ عَلَى وَجْهِ الْأَرْضِ مَاءُ زَمْزَمَ فِيهِ طَعَامٌ مِنَ الطُّعْمِ وَشِفَاءٌ مِنَ السُّقْمِ. |
| *மு:ஜமுல் கபீர் தப்ரானி 9/308 – 11004* | | |
| **இரண்டு வாக்கியங்கள் நாவுக்கு எளிதானவை; (நன்மை, தீமை நிறுக்கப்படும்) தராசில் கனமானவை; அளவற்ற அருளாளனின் பிரியத்திற்குரியவை. (அவை:) சுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹி; சுப்ஹானல்லாஹில் அழீம்.** | 122 | كَلِمَتَانِ خَفِيفَتَانِ عَلَى اللِّسَانِ ثَقِيلَتَانِ فِي الْمِيزَانِ حَبِيبَتَانِ إِلَى الرَّحْمَنِ سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ سُبْحَانَ اللهِ الْعَظِيم. |
| *ஸஹீஹுல் புகாரி – 6682* | | |

| | | |
|---|---|---|
| **யார் (சுப்ஹானல்லாஹில் அழீய்ம் வபிஹம்திஹி மகத்துவமிக்க அல்லாஹ்வை நான் துதிக்கிறேன். அவனது புகழைக் கொண்டும் துதிக்கிறேன்.) என்று சொல்வாரோ அவருக்கு சுவர்க்கத்தில் பேரித்த மரம் நட்டப்படும்.** | 123 | من قال: سبحان الله العظيم وبحمده غرست له نخلة في الجنة. |

*திர்மிதி – 3464*

| | | |
|---|---|---|
| **அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான (துதிச்) சொற்கள் நான்கு ஆகும். 1.சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) 2.அல்ஹம்து லில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) 3.லா இலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை) 4.அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகவும் பெரியவன்). இவற்றில் எதை நீர் முதலில் கூறினாலும் உம்மீது குற்றமில்லை.** | 124 | أَحَبُّ الْكَلاَمِ إِلَى اللَّهِ أَرْبَعٌ سُبْحَانَ اللَّهِ وَالْحَمْدُ لِلَّهِ وَلاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَاللَّهُ أَكْبَرُ. لاَ يَضُرُّكَ بِأَيِّهِنَّ بَدَأْتَ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 4330*

| | | |
|---|---|---|
| **கியாம நாளில் மக்களில் எனக்கு மிக நெருக்கமானவர் என் மீது அதிகம் ஸலவாத்து சொல்பவரே.** | 125 | أن أولى الناس بي يوم القيامة أكثرهم علي صلاة. |

*திர்மிதி – 484*

| | | |
|---|---|---|
| **யாரிடத்தில் என்னை பற்றி நினைவு கூறப்படுகிறதோ அவர் என் மீது ஸலவாத் சொல்லட்டும். என் மீது யார் ஒரு தடவை ஸலவாத் சொல்கிறாரோ அவர் மீது அல்லாஹ் பத்து தடவை அருள் புரிகிறான்.** | 126 | مَنْ ذُكِرْتُ عِنْدَهُ فَلْيُصَلِّ عَلَيَّ ، وَمَنْ صَلَّى عَلَيَّ مَرَّةً صَلَّى اللَّهُ عَلَيْهِ عَشْرًا. |

*குப்ரா நஸயீ – 9806*

| | | |
|---|---|---|
| "நமக்கு மோசடி செய்தவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்" | 127 | مَنْ غَشَّنَا فَلَيْسَ مِنَّا. |

ஸஹீஹ் முஸ்லிம் – 294

| | | |
|---|---|---|
| யார் லுஹ்ர் தொழுகைக்கு முன் நான்கு ரக்அத்கள், லுஹ்ர் தொழுகைக்குப்பிறகு இரண்டு ரக்அத்கள், மஃக்ரிப் தொழுகைக்குப்பிறகு இரண்டு ரக்அத்கள், இஷா தொழுகைக்குப் பின்னர் இரண்டு ரக்அத்கள், ஃபஜ்ர் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்கள் எனப் பன்னிரண்டு ரக்அத்கள் சுன்னத்துகளை தொடர்ந்து தொழுதுவருவாரோ அவருக்கு "அல்லாஹ்" சுவர்க்கத்தில் ஒரு வீட்டை கட்டுகிறான். | 128 | من ثابر على ثنتي عشرة ركعة من السنة بنى الله له بيتا في الجنة أربع ركعات قبل الظهر وركعتين بعدها وركعتين بعد المغرب وركعتين بعد العشاء وركعتين قبل الفجر. |

திர்மிதி – 379

| | | |
|---|---|---|
| "நான் இரண்டு நபர்களில் மூன்றாவதாக இணைந்து கொள்கிறேன். ஒருவர் மற்றொருவருக்கு துரோகம் செய்துவிட்டால் அவர்களை விட்டு நான் விலகிக் கொள்கிறேன்" என அல்லாஹ் சொல்வதாக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். | 129 | إِنَّ اللَّهَ يَقُولُ أَنَا ثَالِثُ الشَّرِيكَيْنِ مَا لَمْ يَخُنْ أَحَدُهُمَا صَاحِبَهُ فَإِذَا خَانَهُ خَرَجْتُ مِنْ بَيْنِهِمَا. |

அபூதாவூத் – 3385

| | | |
|---|---|---|
| யார் இம்மையில் ஓர் இறைநம்பிக்கையாளரின் துன்பங்களில் ஒன்றை அகற்றுகிறாரோ அவருடைய மறுமைத் துன்பங்களில் ஒன்றை அல்லாஹ் அகற்றுகிறான். | 130 | مَنْ نَفَّسَ عَنْ مُؤْمِنٍ كُرْبَةً مِنْ كُرَبِ الدُّنْيَا نَفَّسَ اللَّهُ عَنْهُ كُرْبَةً مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ. |

ஸஹீஹ் முஸ்லிம் – 5231

| | | |
|---|---|---|
| **யார் சிரமப்படுவோருக்கு உதவி செய்கிறாரோ அவருக்கு அல்லாஹ் இம்மையிலும் மறுமையிலும் உதவி செய்கிறான்.** | **131** | مَنْ يَسَّرَ عَلَى مُعْسِرٍ يَسَّرَ اللَّهُ عَلَيْهِ فِى الدُّنْيَا وَالآخِرَةِ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 5231*

| | | |
|---|---|---|
| **(கணவனை இழந்த) கைம்பெண்ணுக்காகவும் ஏழைக்காகவும் பாடுபடுகின்றவர், "அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிபவரைப் போன்றவர் ஆவார்' அல்லது "இரவில் நின்று வணங்கி பகலில் நோன்பு நோற்பவரைப் போன்றவர் ஆவார்"** | **132** | السَّاعِي عَلَى الأَرْمَلَةِ وَالْمِسْكِينِ كَالْمُجَاهِدِ فِي سَبِيلِ اللهِ ، أَوِ الْقَائِمِ اللَّيْلَ الصَّائِمِ النَّهَارَ. |

*ஸஹீஹுல் புகாரி – 5353*

| | | |
|---|---|---|
| **அடியான் தன் சகோதரன் ஒருவனுக்கு உதவி செய்துகொண்டிருக்கும்வரை அந்த அடியானுக்கு அல்லாஹ் உதவி செய்துகொண்டிருக்கிறான்.** | **133** | وَاللَّهُ فِى عَوْنِ الْعَبْدِ مَا كَانَ الْعَبْدُ فِى عَوْنِ أَخِيهِ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 5231*

| | | |
|---|---|---|
| **ஸஃது பின் உப்பாதா ரலி அவர்கள் நபியவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே எனது தாயாருக்காக நான் செய்யும் தர்மங்களில் எந்த தர்மம் மிகச்சிறப்பானது என்று கேட்டார். அதற்கு நபியவர்கள் தண்ணீர் என்றார்கள். ஸஃது ரலி அவர்கள் ஒரு கிணறு தோண்டி இது ஸஃது அவர்களின் தாயாருக்காக உரியது என்று சொன்னார்.** | **134** | عَنْ سَعْدِ بْنِ عُبَادَةَ أَنَّهُ قَالَ يَا رَسُولَ اللَّهِ إِنَّ أُمَّ سَعْدٍ مَاتَتْ فَأَىُّ الصَّدَقَةِ أَفْضَلُ قَالَ « الْمَاءُ ». قَالَ فَحَفَرَ بِئْرًا وَقَالَ هَذِهِ لأُمِّ سَعْدٍ. |

*அபூதாவூத் – 1683*

| | | |
|---|---|---|
| "உயிருள்ள பிராணி ஒவ்வொன்றின் விஷயத்திலும் (அதற்குக் கருணை காட்டினால்) உங்களுக்குப் பிரதிபலன் உண்டு" | 135 | فِي كُلِّ ذَاتِ كَبِدٍ رَطْبَةٍ أَجْرٌ. |
| *ஸஹீஹுல் புகாரி – 2466* | | |
| யார் இஸ்திஃபாரை அவசியமாக்கிக் கொண்டாரோ அவருக்கு அனைத்து நெருக்கடியிலிருந்தும் கவலையிலிருந்தும் விடுபடும் ஒரு வழியை அல்லாஹ் ஏற்படுத்துகிறான். அவர் எண்ணாத வழிகளில் இருந்து அவருக்கு உணவளிக்கிறான். | 136 | مَنْ لَزِمَ الاِسْتِغْفَارَ جَعَلَ اللَّهُ لَهُ مِنْ كُلِّ ضِيقٍ مَخْرَجًا وَمِنْ كُلِّ هَمٍّ فَرَجًا وَرَزَقَهُ مِنْ حَيْثُ لاَ يَحْتَسِبُ. |
| *அபூதாவூத் – 1520* | | |
| மனிதர்களுக்கு நன்றி செலுத்தாதவனுக்கு அல்லாஹ் நன்றி செலுத்தமாட்டான். | 137 | لاَ يَشْكُرُ اللَّهَ مَنْ لاَ يَشْكُرُ النَّاسَ. |
| *அபூதாவூத் – 4813* | | |
| நோன்பாளியின் வாய் வாடையானது, கஸ்தூரியின் வாசனையைவிட அல்லாஹ்விடம் நறுமணமிக்கதாகும். | 138 | لَخَلُوفُ فَمِ الصَّائِمِ أَطْيَبُ عِنْدَ اللهِ مِنْ رِيحِ الْمِسْكِ. |
| *ஸஹீஹுல் புகாரி – 5927* | | |
| அல்லாஹ்வின் பாதையில் (அறப் போருக்குச் செல்லும் போது) ஒரு நாள் நோன்பு நோற்றவரின் முகத்தை அல்லாஹ் நரக நெருப்பை விட்டு எழுபது ஆண்டுகள் (பயணத்) தொலைவிற்கு அப்புறப்படுத்தி விடுவான். | 139 | مَنْ صَامَ يَوْمًا فِي سَبِيلِ اللهِ بَعَّدَ اللَّهُ وَجْهَهُ ، عَنِ النَّارِ سَبْعِينَ خَرِيفًا. |
| *ஸஹீஹுல் புகாரி – 2840* | | |

**140**

مَنْ قَامَ لَيْلَةَ الْقَدْرِ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ.

**யார் லைலத்துல் கத்ர் இரவில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் நின்று வணங்குகிறாரோ அவரது முன் பாவம் மன்னிக்கப்படுகின்றது.**

*ஸஹீஹுல் புகாரி – 1901*

---

**141**

مَنْ صَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ.

**எவர் நம்பிக்கை கொண்டவராகவும், நன்மையை எதிர்பார்த்தவராகவும் ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பாரோ அவரது முந்தைய பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும்.**

*ஸஹீஹுல் புகாரி – 38*

---

**142**

لاَ ضَرَرَ وَلاَ ضِرَارَ.

**எவரும் தன்னுடைய தோழருக்கு தவறுதலாகவோ வேண்டுமென்றோ எந்த இடையூறும் அளிக்க வேண்டாம்.**

*முஸ்னத் அஹ்மத் – 2867. இப்னுமாஜா – 2340*

---

**143**

سُئِلَ عَنْ صَوْمِ يَوْمِ عَاشُورَاءَ فَقَالَ: يُكَفِّرُ السَّنَةَ الْمَاضِيَةَ.

**நபியவர்களிடத்தில் ஆஷூரா நோன்பை பற்றி கேட்கப்பட்டது அதற்கு நபியவர்கள் அது கடந்த ஒரு வருடத்தின் (சிறு) பாவங்களை போக்கிவிடும் என்றார்கள்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 2804*

---

**144**

الَّذِي تَفُوتُهُ صَلاَةُ الْعَصْرِ كَأَنَّمَا وُتِرَ أَهْلَهُ وَمَالَهُ.

**தொழுகையில் ஒரு தொழுகை (அஸர்) உண்டு; ஒருவருக்கு அது தவறி-விடுமாயின் அது அவருடைய மனைவி மக்களும் அவரது செல்வமும் பறிக்கப்பட்டுவிட்டதைப் போன்றதாகும்.**

*ஸஹீஹுல் புகாரி – 552*

| | | |
|---|---|---|
| ஸகாத் கொடுக்க மறுத்தவர் கியாம நாளில் நரகத்தில் இருப்பார். | 145 | مَانِعُ الزَّكَاةِ يَوْمَ الْقِيَامَةِ فِي النَّارِ. |

*மு:ஜமுல் ஸஹீர் தப்ரானி – 935*

| | | |
|---|---|---|
| நபியவர்களிடத்தில் அரபா நோன்பைப்பற்றி கேட்கப்பட்டது அதற்கு நபியவர்கள் "சென்ற மற்றும் வருகின்ற ஒரு வருடத்தின் (சிறு) பாவங்களுக்கான பரிகாரம்" என்று கூறினார்கள். | 146 | صِيَامُ الدَّهْرِ كُلِّهِ صِيَامُ يَوْمِ عَرَفَةَ أَحْتَسِبُ عَلَى اللَّهِ أَنْ يُكَفِّرَ السَّنَةَ الَّتِى قَبْلَهُ وَالسَّنَةَ الَّتِى بَعْدَهُ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 2803*

| | | |
|---|---|---|
| எந்த சமுதாயம் ஸகாத் வழங்க மறுக்கிறதோ அந்த சமுதாயத்தை பஞ்சத்தின் மூலம் அல்லாஹ் சோதிப்பான். | 147 | ما منع قوم الزكاة إلا ابتلاهم الله بالسنين. |

*மு:ஜமுல் அஸ்வத் தப்ரானி – 4577*

| | | |
|---|---|---|
| ஒருவர் தமது கையால் உழைத்து உண்பதைவிடச் சிறந்த உணவை ஒருபோதும் உண்ண முடியாது. தாவூத் நபி அவர்கள் தமது கையால் உழைத்து உண்பவர்களாகவே இருந்தார்கள். | 148 | مَا أَكَلَ أَحَدٌ طَعَامًا قَطُّ خَيْرًا مِنْ أَنْ يَأْكُلَ مِنْ عَمَلِ يَدِهِ وَإِنَّ نَبِيَّ اللهِ دَاوُدَ - عَلَيْهِ السَّلَامُ - كَانَ يَأْكُلُ مِنْ عَمَلِ يَدِهِ. |

*ஸஹீஹுல் புகாரி – 2072*

| | | |
|---|---|---|
| நிச்சயமாக தர்மம் இறைவனின் கோபத்தை அணைக்கும். கெட்ட மரணத்தை தடுக்கும். | 149 | إِنَّ صَدَقَةَ السِّرِّ لَتُطْفِئُ غَضَبَ الرَّبِّ، وَتَدْفَعُ مَيْتَةَ السُّوءِ. |

*திர்மிதி – 664*

| | | |
|---|---|---|
| **நன்மையான காரியங்களை செய்வது கெட்ட முடிவை தடுக்கும்.** | **150** | صَنَائِعُ الْمَعْرُوفِ تَقِي مَصَارِعَ السُّوءِ |

*மு:ஜமுல் கபீர் தப்ரானி – 7939*

| | | |
|---|---|---|
| **முஸ்லிம்களுக்கெதிராக எவன் ஆயுதம் ஏந்துகிறானோ அவன் நம்மைச் சார்ந்தவனல்லன்.** | **151** | مَنْ حَمَلَ عَلَيْنَا السِّلَاحَ فَلَيْسَ مِنَّا. |

*ஸஹீஹுல் புகாரி – 6874*

| | | |
|---|---|---|
| **சொந்தங்களோடு இணைந்து வாழ்வது வாழ்நாளை அதிகரிக்கச் செய்யும்.** | **152** | صِلَةُ الرَّحِمِ تَزِيدُ فِي الْعُمُرِ. |

*மு:ஜமுல் கபீர் தப்ரானி – 7939*

| | | |
|---|---|---|
| **ஏழையின் மீது தர்மம் செய்வது ஒரு தர்மம் செய்த நன்மையை பெற்றுத்தரும். சொந்தங்களுக்கு தர்மம் செய்வது இரண்டு தர்மம் செய்த நன்மையை பெற்றுத்தரும். ஒன்று தர்மம் செய்த நன்மை. இரண்டு சொந்தங்களை சேர்த்த நன்மை.** | **153** | إن الصدقة على المسكين صدقة وهي على ذي الرحم ثنتان صدقة وصلة. |

*திர்மிதி – 658*

| | | |
|---|---|---|
| **அல்லாஹ்வின் தூதர் அவர்களே நான் யாருக்கு அதிகம் நன்மை செய்ய வேண்டும்? என்று கேட்டேன். அதற்கு நபியவர்கள் உன்னுடைய தாய்க்கு பிறகு உன்னுடைய தாய்க்கு பிறகு உன்னுடைய தாய்க்கு பிறகு உன்னுடைய தந்தைக்கு பிறகு நெருங்கியவர்களுக்கு என்று பதிலளித்தார்கள்.** | **154** | عَنْ بَهْزِ بْنِ حَكِيمٍ عَنْ أَبِيهِ عَنْ جَدِّهِ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللَّهِ مَنْ أَبَرُّ قَالَ أُمَّكَ ثُمَّ أُمَّكَ ثُمَّ أُمَّكَ ثُمَّ أَبَاكَ ثُمَّ الأَقْرَبَ فَالأَقْرَبَ. |

*அபூதாவூத் – 5141*

**155**

إِنَّ شَرَّ النَّاسِ عِنْدَ اللهِ مَنْزِلَةً يَوْمَ الْقِيَامَةِ مَنْ تَرَكَهُ النَّاسُ اتِّقَاءَ شَرِّهِ.

**எவரது தீங்கை அஞ்சி மக்கள் (அவருடன் இயல்பாகப் பழகாமல்) விட்டு விடுகிறார்களோ அவரே மறுமை நாளில் அல்லாஹ்விடம் அந்தஸ்தில் மிகவும் மோசமானவர்**

*ஸஹீஹுல் புகாரி – 6032*

**156**

كَانَ الرَّجُلُ يُدَايِنُ النَّاسَ فَكَانَ يَقُولُ لِفَتَاهُ إِذَا أَتَيْتَ مُعْسِرًا فَتَجَاوَزْ عَنْهُ لَعَلَّ اللَّهُ أَنْ يَتَجَاوَزَ عَنَّا قَالَ فَلَقِيَ اللَّهَ فَتَجَاوَزَ عَنْهُ.

**(முன் காலத்தில்) ஒரு மனிதர் மக்களுக்குக் கடன் கொடுத்து (உதவி) வந்தார். (அதை வசூலிக்கச் செல்கின்ற) தனது (அலுவலரான) வாலிபரிடம், "(வசதியின்றிச்) சிரமப்படுபவரிடம் நீ சென்றால் (அவரைக் கண்டு கொள்ளாமல்) மன்னித்து(க் கடனைத் தள்ளுபடி செய்து) விடு. அல்லாஹ்வும் (நம்மைக் கண்டு கொள்ளாமல்) மன்னித்து விடக்கூடும்" என்று சொல்லிவந்தார். அவர் (மரணமடைந்து) அல்லாஹ்வைச் சந்தித்த போது அவருடைய பிழைகளைப் பொறுத்து அவரை மன்னித்து விட்டான்.**

*ஸஹீஹுல் புகாரி – 3480*

**157**

السواك مطهرة للفم مرضاة للرب.

**மிஸ்வாக் (பல்துலக்குவது) செய்வது சுத்தம் தரக்கூடியதாகவும் இறைவனின் திருப்பொருத்தத்தை பெற்றுத் தரக்கூடியதாகவும் இருக்கிறது.**

*நஸயீ – 5*

**158**

مَنْ تَوَضَّأَ فَأَحْسَنَ الْوُضُوءَ خَرَجَتْ خَطَايَاهُ مِنْ جَسَدِهِ حَتَّى تَخْرُجَ مِنْ تَحْتِ أَظْفَارِهِ.

**யார் ஒளூ செய்து அதை அழகுற செய்கிறாரோ அவருடைய உடலிலிருந்து பாவங்கள் வெளியேறிவிடுகின்றன. முடிவில் அவருடைய நகங்களுக்கு கீழிருந்து பாவங்கள் வெளியேறிவிடுகின்றன.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 245*

| | | |
|---|---|---|
| **மக்களுக்கு சிரமம் மட்டும் இல்லையென்றால் அவர்களை ஒவ்வொரு உளூவுக்கும் ஒரு தொழுகையை தொழும்படி ஏவியிருப்பேன். அது போன்று ஒவ்வொரு உளூவின் போதும் மிஸ்வாக் செய்யும்படி ஏவியிருப்பேன்.** | 159 | لَوْلاَ أَنْ أَشُقَّ عَلَى النَّاسِ لأَمَرْتُهُمْ عِنْدَ كُلِّ صَلاَةٍ بِوُضُوءٍ وَمَعَ الْوُضُوءِ بِالسِّوَاكِ. |

*நஸயீ – 3027*

| | | |
|---|---|---|
| **பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் செய்யப்படும் பிரார்த்தனை மறுக்கப்படாது.** | 160 | الدعاء لا يرد بين الأذان والإقامة. |

*திர்மிதி – 212*

| | | |
|---|---|---|
| **உங்களில் ஒருவர் முழுமையான முறையில் அங்கத் தூய்மை செய்துவிட்டு, "அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தகு லா ஷரீக லகு வ அன்ன முஹம்மதன் அப்துகு வரசூலுஹு" (அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதிமொழிகிறேன்) என்று கூறினால், சொர்க்கத்தின் எட்டு வாசல்களும் அவருக்காகத் திறக்கப்படுகின்றன. அவற்றில் தாம் நாடிய வாசலில் அவர் நுழைந்துகொள்ளலாம்.** | 161 | مَنْ قَالَ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ وَأَنَّ عِيسَى عَبْدُ اللَّهِ وَابْنُ أَمَتِهِ وَكَلِمَتُهُ أَلْقَاهَا إِلَى مَرْيَمَ وَرُوحٌ مِنْهُ وَأَنَّ الْجَنَّةَ حَقٌّ وَأَنَّ النَّارَ حَقٌّ أَدْخَلَهُ اللَّهُ مِنْ أَىِّ أَبْوَابِ الْجَنَّةِ الثَّمَانِيَةِ شَاءَ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 397*

| | | |
|---|---|---|
| **சுவர்க்கத்தின் திறவுகோல் தொழுகையாகும்.** | 162 | مفتاح الجنة الصلاة. |

*திர்மிதி – 4*

**163**

مَنْ بَنَى مَسْجِدًا لِلَّهِ تَعَالَى بَنَى اللَّهُ لَهُ بَيْتًا فِي الْجَنَّةِ.

**யார் அல்லாஹ்விற்காக ஒரு பள்ளிவாசலை கட்டுகிறாரோ அல்லாஹ் அவருக்காக சுவர்க்கத்தில் ஒரு வீட்டை கட்டுகிறான்.**

*ஸஹீஹ் முஸ்லிம் – 523*

**164**

بُنِيَ الإِسْلاَمُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ ، وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ ، وَإِقَامِ الصَّلاَةِ ، وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ ، وَصَوْمِ رَمَضَانَ.

**இஸ்லாம் ஐந்து அம்சங்கள் மீது நிறுவப்பட்டுள்ளது.**

**1. அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதியாக நம்புவது.**

**2. தொழுகையை நிலைநிறுத்துவது.**

**3. (கடமையானோர்) ஸகாத் வழங்குவது.**

**4. (இயன்றோர் இறையில்லம் கஅபாவில்) ஹஜ் செய்வது.**

**5. ரமளானில் நோன்பு நோற்பது.**

*ஸஹீஹுல் புகாரி – 8*

**165**

فَمَنْ رَغِبَ عَنْ سُنَّتِي فَلَيْسَ مِنِّي.

**என் வழிமுறையை யார் கைவிடுகின்றாரோ அவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்.**

*ஸஹீஹுல் புகாரி – 5063*

**166**

**لا تزول قدما عبد يوم القيامة حتى يسئل عن عمره فيم أفناه وعن علمه فيم فعل وعن ماله من أين اكتسبه وفيم أنفقه وعن جسمه فيم أبلا.**

**மறுமை நாளில் ஆதமின் மகனிடம் ஐந்து விஷயங்கள் குறித்து விசாரிக்கப்படுவதற்கு முன் இறைவனுக்கு அருகிலிருந்து அவனுடைய பாதம் நகராது. 1.அவன் வாழ்நாள் அவன் அதை எவ்வாறு கழித்தான், 2.அவன் இளமை அதை அவன் எவ்வாறு பயன்படுத்தினான், 3.அவன் பொருளாதாரம் அதை அவன் எவ்வாறு திரட்டினான், 4.அந்த பொருளாதாரத்தை எவ்வாறு செலவிட்டான், 5.அவன் கற்ற கல்வியின் மூலம் என்ன செயலாற்றினான்.**

*திர்மிதி – 2340*

**167**

ஒரு அடியார் மறுமையில் தொழுகையைப்பற்றிதான் முதலில் விசாரிக்கப்படுவார். அந்த தொழுகை சீராக இருந்தால் அவர் வெற்றியடைந்துவிட்டார். அந்த தொழுகை அவரிடத்தில் சீராக இல்லையென்றால் அவர் நஷ்டமடைந்துவிட்டார்.

أول ما يحاسب به العبد يوم القيامة من عمله صلاته فإن صلحت فقد أفلح وأنجح وإن فسدت فقد خاب وخسر.

*திர்மிதி – 413*

---

**168**

ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) இரு நீரோடைகள் (நிறைய) செல்வம் இருந்தாலும் மூன்றாவதையும் அவன் தேடுவான். ஆதமின் மகனுடைய வயிற்றை மண்ணை (மரணத்தை)த் தவிர வேறெதுவும் நிரப்பாது.

لَوْ كَانَ لاِبْنِ آدَمَ وَادِيَانِ مِنْ مَالٍ لاَبْتَغَى ثَالِثًا ، وَلاَ يَمْلأُ جَوْفَ ابْنِ آدَمَ إِلاَّ التُّرَابُ وَيَتُوبُ اللَّهُ عَلَى مَنْ تَابَ.

*ஸஹீஹுல் புகாரி – 6436*

---

**169**

உங்களில் ஒருவருடைய (வீட்டு) வாசலில் ஓர் ஆறு (ஓடிக்கொண்டு) இருக்கிறது. அதில் அவர் தினமும் ஐந்து முறை நீராடுகிறார். இந்நிலையில் அவரது உடலில் அழுக்கேதும் இருக்குமா?'' என்று கேட்டார்கள். அதற்கு மக்கள் "அவரது உடலில் அழுக்கேதும் இராது'' என்று பதிலளித்தனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இது தான் ஐவேளைத் தொழுகைகளின் நிலையாகும். அ(வற்றை நிறைவேற்றுவ)தன் மூலம் அல்லாஹ் தவறுகளை அழிக்கிறான்.

أَرَأَيْتُمْ لَوْ أَنَّ نَهْرًا بِبَابِ أَحَدِكُمْ يَغْتَسِلُ مِنْهُ كُلَّ يَوْمٍ خَمْسَ مَرَّاتٍ هَلْ يَبْقَى مِنْ دَرَنِهِ شَىْءٌ ». قَالُوا لاَ يَبْقَى مِنْ دَرَنِهِ شَىْءٌ.قَالَ « فَذَلِكَ مَثَلُ الصَّلَوَاتِ الْخَمْسِ يَمْحُو اللَّهُ بِهِنَّ الْخَطَايَا.

*ஸஹீஹ் முஸ்லிம் – 1185*

---

**170**

எவருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகிறானோ அவரை மார்க்கத்தில் விளக்கம் பெற்றவராக ஆக்கிவிடுகின்றான்.

مَنْ يُرِدِ اللَّهُ بِهِ خَيْرًا يُفَقِّهْهُ فِي الدِّينِ.

*ஸஹீஹுல் புகாரி – 71*

| | | |
|---|---|---|
| **நம்மிடமிருந்து ஒரு செய்தியை செவியேற்று எம்மிடம் செவியேற்றதைப் போன்றே அதை பிறரிடம் எடுத்துரைக்கும் மனிதருக்கு அல்லாஹ் செழிப்பான வாழ்வை வழங்கட்டும். ஏனெனில் நேரில் கேட்டவரை விட கேட்டவரிடமிருந்து கேட்கும் எத்தனையோ பேர் நன்கு புரிந்துகொள்பவர்கள் ஆவர்.** | **171** | نضر الله امرأ سمع منا شيئا فبلغه كما سمع فرب مبلغ أوعى من سامع. |
| *திர்மிதி – 2578* | | |
| **யார் கல்வியைத் தேடி ஒரு பாதையில் நடக்கிறாரோ அவருக்கு அதன் மூலம் சொர்க்கத்திற்குச் செல்லும் பாதையை அல்லாஹ் எளிதாக்குகிறான்.** | **172** | مَنْ سَلَكَ طَرِيقًا يَلْتَمِسُ فِيهِ عِلْمًا سَهَّلَ اللَّهُ لَهُ بِهِ طَرِيقًا إِلَى الْجَنَّةِ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5231* | | |
| **என் மீது யார் இட்டுக்கட்டி பொய் சொல்வானோ அவன் நரகத்தில் தனது இருப்பிடத்தை அமைத்துக்கொள்ளட்டும்.** | **173** | مَنْ كَذَبَ عَلَيَّ مُتَعَمِّدًا فَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنَ النَّارِ. |
| *ஸஹீஹுல் புகாரி – 110* | | |
| **குர்ஆனைத் தாமும் கற்று பிறருக்கும் அதனைக் கற்பித்தவரே உங்களில் சிறந்தவர்.** | **174** | خَيْرُكُمْ مَنْ تَعَلَّمَ الْقُرْآنَ وَعَلَّمَهُ. |
| *ஸஹீஹுல் புகாரி – 5027* | | |
| **குர்ஆனை ஓதிவாருங்கள். ஏனெனில், குர்ஆன் ஓதிவருபவர்களுக்கு அது மறுமையில் வந்து (இறைவனிடம்) பரிந்துரை செய்யும்.** | **175** | اقْرَءُوا الْقُرْآنَ فَإِنَّهُ يَأْتِي يَوْمَ الْقِيَامَةِ شَفِيعًا لأَصْحَابِهِ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 1470* | | |

| | | |
|---|---|---|
| ஒரு அடியான் தன்னுடைய இறைவனுக்கு மிக நெருக்கமாகும் இடம் அவன் ஸஜ்தா செய்யும் இடமாகும். எனவே (ஸஜ்தாவில்) பிரார்த்தனையை அதிகப்படுத்துங்கள். | 176 | أَقْرَبُ مَا يَكُونُ الْعَبْدُ مِنْ رَبِّهِ وَهُوَ سَاجِدٌ فَأَكْثِرُوا الدُّعَاءَ. |
| ஸஹீஹ் முஸ்லிம் – 482 | | |
| ஜமாத்துடன் தொழுவது உங்களில் ஒருவர் தனியாக தொழுவதில் இருபத்தைந்து மடங்கு சிறப்பிற்குரியதாகும். | 177 | صَلاَةُ الْجَمَاعَةِ أَفْضَلُ مِنْ صَلاَةِ أَحَدِكُمْ وَحْدَهُ بِخَمْسَةٍ وَعِشْرِينَ جُزْءًا. |
| ஸஹீஹ் முஸ்லிம் – 650 | | |
| நபியவர்களிடத்தில் எந்த அமல் மிகச்சிறந்தது என்று கேட்கப்பட்டது. அதற்கு நபியவர்கள் தொழுகையை அதன் ஆரம்ப நேரத்தில் தொழுவதாகும் என பதிலளித்தார்கள். | 178 | سئل النبي صلى الله عليه و سلم أي الأعمال أفضل ؟ قال الصلاة على وقتها. |
| திர்மிதி – 170 | | |
| ஒருவர் அதிகாலை தொழுகையை ஜமாத்துடன் தொழுதுவிட்டு சூரியன் உதயமாகும் வரை இறைவனை திக்ர் செய்த வண்ணம் அமர்ந்துவிட்டுப் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதால் அவருக்கு ஒரு ஹஜ் மற்றும் ஒரு உம்ராவின் நன்மை போன்றது கிடைக்கும். | 179 | من صلى الغداة في جماعة ثم قعد يذكر الله حتى تطلع الشمس ثم صلى ركعتين كانت له كأجر حجة وعمرة [قال] قال رسول الله صلى الله عليه و سلم تامة تامة. |
| திர்மிதி – 535 | | |
| இறையடியானுக்கும் குஃப்ருக்கும் மத்தியிலுள்ள வித்தியாசம் தொழுகையை விடுவதுதான். | 180 | بين العبد وبين الكفر ترك الصلاة. |
| திர்மிதி – 2620 | | |

| | | |
|---|---|---|
| விபச்சாரியான ஒரு பெண், ஒரு கிணற்றின் விளிம்பில் தனது நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்த ஒரு நாயைக் கடந்து சென்றாள். அந்த நாயைத் தாகம் சாகடிக்கவிருந்தது. அதைக் கண்ட அப்பெண் உடனே தன் காலுறையைக் கழற்றி அதைத் தன் முந்தானையில் கட்டி (கிணற்று) நீரை இறைத்து அதற்குக் கொடுத்தாள். ஆகவே, அது பிழைத்துக் கொண்டது. அவள் ஓர் உயிருக்குக் காட்டிய இந்தக் கருணையின் காரணத்தால் அவளுக்கு (பாவ) மன்னிப்பு வழங்கப்பட்டது. | 181 | غُفِرَ لِامْرَأَةٍ مُومِسَةٍ مَرَّتْ بِكَلْبٍ عَلَى رَأْسِ رَكِيٍّ يَلْهَثُ قَالَ كَادَ يَقْتُلُهُ الْعَطَشُ فَنَزَعَتْ خُفَّهَا فَأَوْثَقَتْهُ بِخِمَارِهَا فَنَزَعَتْ لَهُ مِنَ الْمَاءِ فَغُفِرَ لَهَا بِذَلِكَ. |
| என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள். | 182 | وَصَلُّوا كَمَا رَأَيْتُمُونِي أُصَلِّي. |

*ஸஹீஹுல் புகாரி – 631*

| | | |
|---|---|---|
| உங்களுக்கு எதிராகவும் உங்களது குழந்தைகளுக்கு எதிராகவும் உங்களது அடிமைகளுக்கு எதிராகவும் (சாப) பிரார்த்தனை செய்யாதீர்கள். உங்களுக்கு கொடுக்கப்படும் நேரத்தில் உங்களது (சாப) பிரார்த்தனை ஒன்றுபட்டுவிடக்கூடாது (அப்படி சாப பிரார்த்தனை ஒன்றுபட்டால்) உங்களது சாப பிரார்த்தனைக்கு பதிலளிக்கப்பட்டுவிடும். | 183 | تَدْعُوا عَلَى أَنْفُسِكُمْ وَلاَ تَدْعُوا عَلَى أَوْلاَدِكُمْ وَلاَ تَدْعُوا عَلَى خَدَمِكُمْ وَلاَ تَدْعُوا عَلَى أَمْوَالِكُمْ لاَ تُوَافِقُوا مِنَ اللَّهِ تَبَارَكَ وَتَعَالَى سَاعَةَ نَيْلٍ فِيهَا عَطَاءٌ فَيَسْتَجِيبَ لَكُمْ. |

*அபூதாவூத் – 1532*

| | | |
|---|---|---|
| ஆதமுடைய சந்ததிகள் அனைவரும் தவறு செய்பவர்களே. தவறு செய்பவர்களில் சிறந்தவர்கள் தவ்பா (பாவமீட்சி) செய்பவர்களே. | 184 | كل ابن آدم خطاء وخير الخطائين التوابون. |

*திர்மிதி – 2499*

| | | |
|---|---|---|
| **ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமை ஏசுவது பாவமாகும்; அவர்கள் இருவரும் போரிட்டுக்கொள்வது (கொலை செய்வது) இறை நிராகரிப்பாகும்.** | **185** | سِبَابُ الْمُسْلِمِ فُسُوقٌ وَقِتَالُهُ كُفْرٌ. |
| *ஸஹீஹுல் புகாரி – 48* | | |
| **(பெண்களைத் திருப்திப்படுத்துவதற்காக எதையும் செய்யத் துணிகின்ற) ஆண்களுக்கு (அந்த)ப் பெண்களைவிட அதிகமாக இடரளிக்கும் (வேறு) எந்தச் சோதனையையும் என(து வாழ்நாளு)க்குப் பிறகு நான் விட்டுச் செல்லவில்லை.** | **186** | مَا تَرَكْتُ بَعْدِي فِتْنَةً أَضَرَّ عَلَى الرِّجَالِ مِنَ النِّسَاءِ. |
| *ஸஹீஹுல் புகாரி – 5096* | | |
| **தமது வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கப்படுவதை, அல்லது வாழ்நாள் நீட்டிக்கப்படுவதை விரும்புகின்றவர் தமது உறவைப் பேணி வாழட்டும்.** | **187** | مَنْ سَرَّهُ أَنْ يُبْسَطَ لَهُ رِزْقُهُ ، أَوْ يُنْسَأَ لَهُ فِي أَثَرِهِ فَلْيَصِلْ رَحِمَهُ. |
| *ஸஹீஹுல் புகாரி – 2067* | | |
| **அன்னையரைப் புண்படுத்துவதை அல்லாஹ் வெறுத்துள்ளான்.** | **188** | إِنَّ اللَّهَ حَرَّمَ عَلَيْكُمْ عُقُوقَ الأُمَّهَاتِ. |
| *ஸஹீஹுல் புகாரி – 5975* | | |
| **தந்தையின் திருப்தியில் இறைவனின் திருப்தி இருக்கிறது. தந்தையின் கோபத்தில் இறைவனின் கோபம் இருக்கிறது.** | **189** | رضي الرب في رضى الوالد وسخط الرب في سخط الوالد. |
| *திர்மிதி – 1899* | | |

| | | |
|---|---|---|
| **எவர் தம் இரு தாடைகளுக்கு இடையே உள்ளதற்கும், தம் இரு கால்களுக்கு இடையே உள்ளதற்கும் என்னிடம் உத்தரவாதம் அளிக்கிறாரோ அவருக்காகச் சொர்க்கத்திற்கு நான் உத்தரவாதம் அளிக்கிறேன்.** | **190** | مَنْ يَضْمَنْ لِي مَا بَيْنَ لَحْيَيْهِ وَمَا بَيْنَ رِجْلَيْهِ أَضْمَنْ لَهُ الْجَنَّةَ. |
| *ஸஹீஹுல் புகாரி – 6474* | | |
| **நீங்கள் மூவர் இருக்கும்போது மூன்றாம வரை விட்டுவிட்டு இருவர் மட்டும் இரகசியம் பேச வேண்டாம்.** | **191** | إِذَا كَانُوا ثَلاَثَةٌ فَلاَ يَتَنَاجَى اثْنَانِ دُونَ الثَّالِثِ. |
| *ஸஹீஹுல் புகாரி – 6288* | | |
| **சிறியவர் பெரியவருக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், சிறு குழுவினர் பெருங் குழுவினருக்கும் (முதலில்) சலாம் (முகமன்) சொல்லட்டும்.** | **192** | يُسَلِّمُ الصَّغِيرُ عَلَى الْكَبِيرِ وَالْمَارُّ عَلَى الْقَاعِدِ وَالْقَلِيلُ عَلَى الْكَثِيرِ. |
| *ஸஹீஹுல் புகாரி – 6231* | | |
| **பிரார்த்தனை ஒரு வணக்கம்.** | **193** | الدُّعَاءُ هُوَ الْعِبَادَةُ. |
| *திர்மிதி – 1481* | | |
| **ஒரு மனிதர் நடுவழியில் கிடந்து மக்களுக்கு இடையூறு அளித்துவந்த மரமொன்றை வெட்டி (அப்புறப்படுத்தி)யதற்காகச் சொர்க்கத்தில் நடமாடுவதை நான் கண்டேன்.** | **194** | لَقَدْ رَأَيْتُ رَجُلاً يَتَقَلَّبُ فِي الْجَنَّةِ فِي شَجَرَةٍ قَطَعَهَا مِنْ ظَهْرِ الطَّرِيقِ كَانَتْ تُؤْذِي النَّاسَ. |
| *ஸஹீஹ் முஸ்லிம் – 5107* | | |

| | | |
|---|---|---|
| **கல்வியை தேடுவது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும்.** | 195 | طَلَبُ الْعِلْمِ فَرِيضَةٌ عَلَى كُلِّ مُسْلِمٍ. |

*இப்னு மாஜா – 224*

| | | |
|---|---|---|
| **என் கண் குளிர்ச்சி தொழுகையில் உள்ளது.** | 196 | جعلت قرة عيني في الصلاة. |

*நஸயீ – 3940*

| | | |
|---|---|---|
| **உங்களில் இறப்பின் நெருக்கத்தில் இருப்பவர்களுக்கு லாயிலாஹ இல்லல்லாஹ் வை நினைவுபடுத்துங்கள்.** | 197 | لقنوا موتاكم لا إله إلا الله. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 976*

| | | |
|---|---|---|
| **உங்களில் ஒருவர் இடது கையின் மூலம் சாப்பிடவோ குடிக்கவோ வேண்டாம் ஏனென்றால் ஷைத்தான் இடது கையின் மூலமாகவே சாப்பிடுகிறான் குடிக்கிறான்.** | 198 | يَأْكُلَنَّ أَحَدٌ مِنْكُمْ بِشِمَالِهِ وَلاَ يَشْرَبَنَّ بِهَا فَإِنَّ الشَّيْطَانَ يَأْكُلُ بِشِمَالِهِ وَيَشْرَبُ بِهَا. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 5386*

| | | |
|---|---|---|
| **ஒவ்வொரு நோயிற்கும் மருந்துண்டு.** | 199 | لِكُلِّ دَاءٍ دَوَاءٌ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 5871*

| | | |
|---|---|---|
| **அல்லாஹ் இந்த வேதத்தின் மூலம் ஒரு கூட்டத்தாரை உயர்த்துகிறான். வேறு சிலரைத் தாழ்த்துகிறான்.** | 200 | إِنَّ اللَّهَ يَرْفَعُ بِهَذَا الْكِتَابِ أَقْوَامًا وَيَضَعُ بِهِ آخَرِينَ. |

*ஸஹீஹ் முஸ்லிம் – 1477*